# அடிப்படைக் கொள்கை பற்றி சில பாடங்கள்



جمعية الدعوة بالزلفي

جمعية الدعوة والإرشاد وتوعية الجاليات بالزلفي

133

هاتف: ٤٢٣٤٤٦٦ ٠١٦ - فاكس: ٤٢٣٤٤٧٧ ٠١٦

**دروس في العقيدة**

**ترجمه إلـــى اللغة التاميلية:**

جمعية الدعوة والإرشاد وتوعية الجاليات بالزلفي

**الطبعة الثانية: ١٤٤٢/٨ هـــ.**


**ⓗ شعبة توعية الجاليات بالزلفي، ١٤٢٥هـ**

*فهرسة مكتبة الملك فهد الوطنية أثناء النشر*

شعبة توعية الجاليات بالزلفي
دروس في العقيدة – الزلفي ، ١٤٢٥ هـ
١٢٧ ص؛ ١٢ × ١٧ سم
ردمك : ٢-٥٠- ٨٦٤-٩٩٦٠
(النص باللغة التاميلية )
١- العقيدة الإسلامية أ.
العنوان

ديوى ٢٤٠ ١٤٢٥/٧١٧

**رقم الإيداع : ١٤٢٥/٧١٧**

**ردمك : ٢-٥٠ – ٨٦٤-٩٩٦٠**

# دروس في العقيدة

# அடிப்படைக் கொள்கை பற்றி சில பாடங்கள்

## இறைநம்பிக்கை

அல்லாஹ் கூறுகிறான்: இத்தூதர் தமது இறைவனிடம் இருந்து தமக்கு அருளப்பட்டதை நம்பினார். நம்பிக்கை கொண்டோரும் (இதை நம்பினார்கள்). அல்லாஹ்வையும், அவனது வானவர்களையும் அவனது வேதங்களையும், அவனது தூதர்களையும் அனைவரும் நம்பினார்கள். மேலும் "அவனது தூதர்களில் எவருக்கிடையேயும் பாரபட்சம் காட்ட மாட்டோம், நாங்கள் செவியுற்றோம், கட்டுப்பட்டோம், எங்கள் இறைவா! உனது மன்னிப்பை (வேண்டுகிறோம்.)உன்னிடமே (எங்கள்) திரும்புதல் உண்டு" எனக் கூறுகின்றனர். (2:285)

1. அல்லாஹ்வின் தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்: "செயல்கள் அனைத்தும் எண்ணங்களைப் பொறுத்தே அமைகின்றன. ஒவ்வொரு மனிதருக்கும் அவர் எண்ணியது தான் கிடைக்கிறது. ஒருவரது ஹிஜ்ரத் (நாடு துறத்தல்) அல்லாஹ்வுக்காகவும் அவனது தூதருக்காகவும் இருந்தால் அவரது ஹிஜ்ரத் அல்லாஹ்வுக்காகவும் அவன் தூதருக் காகவுமே அமையும். ஒருவரது ஹிஜ்ரத் உலகத்தைக் குறிக் கோளாகக் கொண்டிருந்தால் அதையே அவர் அடைவார். அல்லது ஒரு பெண்ணை நோக்கமாகக் கொண்டால் அவளை மணப்பார். எனவே ஒருவரது ஹிஜ்ரத் எதை நோக்கமாகக் கொண்டதோ அதற்காகவே அமையும்."

அறிவிப்பவர்: உமர் (ரலி), நூல்: புகாரி-1, முஸ்லிம்-1907

ஒவ்வொரு செயலுக்கும் இந்த நபிமொழி அடிப்படையாக உள்ளது. இந்த நபிமொழியில் அடங்கியுள்ள செய்திகள்: செயல்கள் இறைவனால் ஏற்கப்படுவதற்கும் நிராகரிக்கப்படு வதற்கும், சரியானதாகவோ அல்லது தவறானதாகவோ அமைவதற்கும் எண்ணமே அடிப்படையாகும். ஒருவர் ஒன்றை செய்ய எண்ணினால் எண்ணியதன் பலனே அவருக்குக் கிடைக்கும். ஒரு செயல் வெளிப்படையில் நல்லதாக இருக் கலாம். ஆனால் தூய எண்ணம் இல்லாததால் அச்செயல் அவனுக்குப் பலனளிக்காமல் போய்விடும். இதற்குத் திருக் குர்ஆனில் பல சான்றுகள் உள்ளன.

“அறிந்து கொள்க! தூய இம்மார்க்கம் அல்லாஹ்வுக்கே உரியது.” (39:3)

“வணக்கத்தை அல்லாஹ்வுக்கே தூய்மையாக்கி அவனை வணங்க வேண்டுமென்றே அவர்கள் ஏவப்பட்டுள்ளனர்.” (98:5)

“(நபியே!) நீர் இணை கற்பித்தால் உமது நல்லறம் அழிந்துவிடும்; நீர் நஷ்டமடைந்தவராவீர்.” (39:65)

இந்நபிமொழியில் இன்னும் பல விஷயங்கள் உள்ளன. எதையும் உள்ளத்திலிருந்து செய்வது தான் காரியத்தின் அடிப்படையாகும். ஒரு மனிதன் ஒரு செயலை தன் இறைவனுக்காக என்ற தூய எண்ணத்துடன் செய்வதற்கும் இணைவைத்தலின் சாயல்கள் மற்றும் ஏனைய தீய நோக்கங்களை விட்டும் அச்செயலைத் தூய்மைப்படுத்து வதற்கும், அச்செயலைக் கொண்டு அல்லாஹ்வின் திரு முகத்தை மட்டுமே நாடுவதற்கும் முயற்சி செய்ய வேண்டும்.

காரியங்கள் அனைத்தும் வெளிப்படையைக் கொண் டல்லாமல் நோக்கங்களைக் கொண்டே அமைகின்றன. ஒரு மனிதனின் வெளிப்படையை வைத்து ஏமாந்து விடக்

கூடாது; சில சமயம் அவனுடைய எண்ணத்தில் களங்கம் ஏற்பட்டு விடலாம். என்றாலும் அடிப்படையில் மனிதர்களைப் பற்றி நல்லெண்ணமே கொள்ள வேண்டும். வணக்க, வழிபாடுகளில் மனிதர்களிடையே காணப்படும் ஏற்றத் தாழ்வுகள் எண்ணங்களைக் கொண்டே அமைகின்றன.

சத்தியம் செய்வது, நேர்ச்சை செய்வது, விவாகரத்துச் செய்வது இன்னும் இதுபோன்ற நிபந்தனைகள், ஒப்பந்தங்கள், உடன்படிக்கைகள் இவை யாவற்றுக்கும் நிய்யத் அவசியம். மறந்தவன், நிர்பந்திக்கப்பட்டவன், அறியாதவன், பைத்தியக் காரன், சிறுவன் ஆகியோரின் மீது மார்க்கச் சட்டங்கள் செல்லு படியாகாது. ஒருவன் எண்ணியதே அவனுக்குக் கிடைக்கும். அதல்லாமல் வேறேதும் கிடைக்குமா? சிந்திக்க வேண்டிய விஷயமாகும். எண்ணங்களை அல்லாஹ்வைத் தவிர வேறு யாரும் அறிய முடியாது.

பிறர் பார்க்க வேண்டும், மெச்ச வேண்டும் என்பதற்காக ஒரு செயலைச் செய்யக் கூடாது என்பதும் இந்நபிமொழியின் போங்கிலிருந்து அறிய முடிகின்றது. ஏனெனில் இதில் இறைவன் அல்லாதவர்களை நாடிச் செய்தல் என்ற நிலை வந்துவிடுகிறது. அடிப்படையில் எவன் இவ்வுலகை நாடு கிறானோ மறுமையை இரண்டாம் பட்சமாகக் கருதுகிறானோ அவனுக்கு மறுமை மறுக்கப்பட்டுவிடும். எவன் அடிப்படையில் மறுமையை நாடி இரண்டாம் பட்சமாக இவ்வுலகை நாடு கிறானா அவனுக்கு இவ்வுலகமும் கிடைத்து விடும். மறுமையில் நற்கூலியும் கிட்டும். எவன் (அல்லாஹ்வுக்காக அல்லாமல்) மக்களுக்காக ஒரு செயலைச் செய்கிறானோ அவன் இணைவைத்தவனாவான். இறைவனுடைய நுட்பமான அறிவும் இரகசியங்களை அவன் நன்கறிந்திருப்பதும் இங்கு

சுட்டிக்காட்டப்பட்டுள்ளது. மட்டுமல்ல இவ்வுலகில் அல்லாஹ் மனிதர்களின் தவறுகளை மறைத்து விடுகிறான். ஏனெனில் தீமை செய்தவர்களை அவர்களின் தீய எண்ணம் காரணமாக அவன் கேவலப்படுத்துவதில்லையே.

இந்நபிமொழியில் இன்னும் பல விஷயங்களும் அடங்கி யுள்ளன. ஒருவன் நற்செயல்களை அதிகம் செய்துள்ளானா என்று கவனிக்கப்பட மாட்டாது; அழகாகச் செய்துள்ளானா என்றே பார்க்கப்படும். அதாவது இக்லாஸ்- அல்லாஹ்வுக்காக என தூய எண்ணத்துடனும், நபிவழியைப் பின்பற்றியும் செய்திருக்கிறானா என்றே பார்க்கப்படும். சிறிதளவு நற்செயல் இக்லாஸுடன் இருந்தால் அதுவே போதுமானதாகும். இதற்கு நபிமொழியில் சான்று உள்ளது.

ஒருவன் ஒன்றைச் செய்வதற்கு முன்னால் நிய்யத்தை சரி செய்து கொள்ள வேண்டும். எந்த ஒரு செயலும் நிய்யத்தைக் கொண்டல்லாமல் ஏற்றுக் கொள்ளப்பட மாட்டாது. இது விஷயத்தில் ஃபர்லும் நஃபிலும் சமமே. நிய்யத்தை மொழிவது கூடாது. ஆனால் எந்த வணக்கத்தில் மொழிவதற்கு ஆதாரம் வந்துள்ளதோ அதைத் தவிர.

## இஸ்லாமும் ஈமானும் ஒரே பொருளுக்கு இரண்டு பெயர்கள்

2. அப்துல் கைஸ் உடைய தூதுக்கு குழு நபி (ஸல்) அவர்களிடம் வந்தபோது, "வந்திருக்கும் இம்மக்கள் யார்?" என்று நபி (ஸல்) அவர்கள் கேட்டார்கள். அதற்கவர்கள், '(நாங்கள்) ரபீஆ வம்சத்தினர்' என்றார்கள். உடனே நபி (ஸல்) அவர்கள், "வருக! வருக!! இழிவும் வருத்தமும் இல்லாத வகையில் உங்கள் வரவு நல்வரவு ஆகுக!" என்று

கூறினார்கள். ‘அல்லாஹ்வின் தூதரே! புனித மாதத்தைத் தவிர வேறு மாதத்தில் நாங்கள் உங்களிடம் வர முடிவ தில்லை. காரணம் எங்களுக்கும் உங்களுக்கும் இடையில் முழர் வம்சத்தைச் சேர்ந்த நிராகரிப்பாளர்கள் (தடையாக) இருக்கிறார்கள். எனவே திட்டவட்டமான சில கட்டளைகளை எங்களுக்குக் கூறுங்கள். அவற்றை நாங்கள் எங்களுக்குப் பின்னால் தங்கிவிட்டவர்களுக்கு அறிவிப்போம். அதன் மூலம் நாங்களும் சொர்க்கம் செல்வோம்’ என்றார்கள். மேலும் நபி (ஸல்) அவர்களிடம் சில வகைப் பானங்களைப் பற்றியும் கேட்டார்கள்.

அப்போது அவர்களுக்கு நபி (ஸல்) அவர்கள் நான்கு காரியங்களை ஏவினார்கள். நான்கு காரியங்களை தடை செய்தார்கள். அல்லாஹ் ஒருவனையே நம்புமாறு அவர்களுக்கு கட்டளையிட்டு, “அல்லாஹ் ஒருவனை நம்புவ தென்றால் என்னவென்று உங்களுக்குத் தெரியுமா?” என்றும் கேட்டார்கள். அதற்கவர்கள் ‘அல்லாஹ்வும் அவன் தூதருமே நன்கறிந்தவர்கள்’ என்றார்கள். அதற்கு நபி (ஸல்) அவர்கள், “வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாரு மில்லை என்றும் முஹம்மத் அல்லாஹ்வின் தூதர் என்றும் உறுதியாக நம்புவது, தொழுகையை நிலைநாட்டுவது, ஸகாத் வழங்குவது, ரமலான் மாதம் நோன்பு நோற்பது, போரில் கிடைக்கும் பொருள்களிலிருந்து ஐந்தில் ஒரு பங்கை நீங்கள் வழங்கி விடுவது” என்று கூறினார்கள்.

மேலும் நான்கு காரியங்களை அவர்களுக்குத் தடை செய்தார்கள். (மது வைத்திருந்த) மண் ஜாடிகள், சுரைக் குடுக்கைகள், பேரீச்ச மரத்தின் அடி மரத்தைக் குடைந்து தயாரித்த மரப்பீப்பாய்கள், தார் பூசப்பட்ட பாத்திரங்கள்

ஆகியவற்றைத் தடை செய்தார்கள். (பின்னர் இத்தடை அகற்றப்பட்டு விட்டது) “இவற்றை நன்கு மனதில் பதிய வைத்துக் கொண்டு இங்கே வராதவர்களுக்கு அறிவித்து விடுங்கள்” என்றும் கூறினார்கள். (புகாரி-53, முஸ்லிம்-17)

அறிவிப்பவர்: இப்னு அப்பாஸ்(ரலி),

**இந்நபிமொழியிலிருந்து பெறப்படும் விஷயங்கள்:**

நற்செயல்கள் ஈமானைச் சேர்ந்ததாகும். ஒரு மார்க்க அறிஞர் பொதுப்படையாக ஒன்றைக் கூறி விட்டு பிறகு அதன் விளக்கத்தைத் தெளிவுபடுத்துவது விரும்பத்தக்கது. அதனால் அவருடைய கூற்று (முழுமையாக) விளங்கிக் கொள்ளப்படும். முதலில் அடிப்படை விஷயங்கள் பற்றியும் அதன் பிறகு முக்கியப் பிச்சனைகள் பற்றியும் எடுத்துக் கூற வேண்டும். விளங்குகின்ற அளவுக்கு அறிவுரை சுருக்கமாக இருக்க வேண்டும்.

இந்நபிமொழியைச் சிந்திப்பவர் அதில் கட்டளையிடப்பட்ட காரியங்கள் ஐந்து இருப்பதைக் காண்பார். (ஆனால் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் நான்கு காரியங்களையே ஏவி யுள்ளார்கள்.) என்றாலும் போரில் கிடைக்கும் பொருள்களில் ஐந்தில் ஒன்றை வழங்குதல் என்பது ஸகாத்தில் சேர்ந்த தாகும். ஏனெனில் அதுவும் செல்வத்திற்குரிய கடமைதானே! அவ்வாறாயின் ஏவப்பட்ட காரியங்கள் நான்காகிவிடுகின்றன. தடை செய்யப்பட்ட நான்கு காரியங்களும் பின்னர் தடை நீக்கப்பட்ன என்று சில ஹதீஸ் கலை வல்லுனர்கள் குறிப்பிடு கின்றனர். ஏனெனில் மேற்கூறப்பட்ட பாத்திரங்களில் போதைப் பொருட்களைத் தவிர ஏனையவற்றை அருந்தலாம் என ஆதாரப்பூர்வமான நபிமொழிகள் கூறுகின்றன.

அறிந்த விஷயங்களை மனனம் செய்வது, அதை பிறருக்கு எடுத்துச் சொல்வது, மக்களிடையே பரப்புவது, கல்வி கற்பதில் முறை வைத்துக் கொள்வது ஆகியவற்றுக்கு ஆர்வமூட்டப் பட்டுள்ளது. இந்நபிமொழியில் ஹஜ் பற்றி குறிப்பிடாததற்குக் காரணம் அந்த நேரத்தில் அது கடமையாக்கப்படவில்லை என்பதுதான் என சில அறிஞர்கள் குறிப்பிட்டுள்ளார்கள். தூது வருபவரிடம் பெயர், குலம் பற்றி விசாரிப்பது, இது நபிவழி ஆகும். (தேடி) வருபவரையும் விருந்தாளியையும் வரவேற்பது, இது அவரிடம் உள்ள அந்நியத்தனம் நீங்கி உள்ளத்தில் அன்பு ஏற்படுவதற்காகும்.

இங்கு ஈமானுக்கு இஸ்லாத்தின் அடிப்படைக் கடமைகள் என விளக்கம் தரப்பட்டுள்ளது. இந்த விளக்கம் அது தனியாக வரும்போதாகும். ஏனெனில் ஒரு இடத்தில் இஸ்லாம் என்றோ அல்லது ஈமான் என்றோ தனித்து வருமானால் ஒன்றை மற்றொன்றுக்கு விளக்கமாக எடுத்துக் கொள்ளலாம். இஸ்லாமும் ஈமானும் சேர்ந்து வந்தால் இரண்டுக்கும் தனித்தனி அர்த்தங்கள் கொள்ள வேண்டும்.

3. நாங்கள் நபி (ஸல்) அவர்களுடன் அமர்ந்திருந்தோம். அப்போது அவர்கள், "இஸ்லாத்தில் பற்றிப்பிடிக்க வேண்டிய பலமான பிடிமானம் எது?" என வினவினார்கள். அதற்கு, 'தொழுகை' என தோழர்கள் பதிலளித்தனர். நபி (ஸல்) அவர்கள் "அது நல்லது தான், நான் கேட்டது அதுவல்ல" என்றார்கள். பிறகு தோழர்கள் 'ஸகாத்' என்றனர். அதற்கு நபி (ஸல்) அவர்கள், "அதுவும் நல்லது தான், நான் கேட்டது அதுவல்ல" என்று கூறினார்கள். பிறகு தோழர்கள், 'ரமலானில் நோன்பு நோற்பது' என்றார்கள். அதற்கு நபி(ஸல்) அவர்கள், "அதுவும் நல்லது தான், நான் கேட்டது அதுவல்ல" என்று

கூறினார்கள். பிறகு 'ஹஜ் செய்வது' எனத் தோழர்கள் கூறினார்கள். நபி (ஸல்) அவர்கள், "அதுவும் நல்லது தான், நான் கேட்டது அதுவல்ல" என்று கூறினார்கள். பிறகு தோழர்கள், 'அறப்போர் செய்வது' என்று கூறினார்கள். நபி (ஸல்) அவர்கள், "அதுவும் நல்லதே! ஆயினும் நான் கேட்டது அதுவல்ல" என்று கூறிவிட்டு, "ஈமானில் (அதாவது இஸ்லாத்தில்) பற்றிப் பிடிக்க வேண்டிய பலமான பிடிமானம் அல்லாஹ்வுக்காக நீ நேசம் கொள்வதும் அல்லாஹ்வுக்காக நீ வெறுப்பதும் ஆகும்" என்று விடையளித்தார்கள்.

அறிவிப்பவர்: பர்ராஉ பின் ஆஸிப் (ரலி),
நூல்: அஹ்மத் (ஸஹீஹுல் ஜாமிஃ)

**இந்நபிமொழியில் அடங்கியுள்ள செய்திகள்:**

நன்மைகளில் ஏற்றத் தாழ்வுகளுடைய பல கடமைகள் இஸ்லாத்தில் உள்ளன. நட்பு கொள்வது, பகைமை பாராட்டுவது, அல்லாஹ்வுக்காக நேசிப்பது, அல்லாஹ்வுக்காக வெறுப்பது ஆகியவை மார்க்கத்தில் உள்ளவையாகும். இறைவனுக்குக் கீழ்ப்படிவர்களை நேசிப்பதும், இறைவனுக்கு மாறு செய்பவர்களை வெறுப்பதும் ஒரு முஸ்லிம் மீது கடமையாகும். அல்லாஹ்வுக்காக நேசிப்பது மற்ற உலகக் காரணங்களுக்காக நேசிப்பதை விட மேலானது. அல்லாஹ் வுக்காக நேசிப்பது என்பது சிலவேளை விகிதாச்சார அடிப்படையில் இருக்கும். ஒரு அடியான் எந்த அளவுக்கு அல்லாஹ்வுக்கு கட்டுப்பட்டு நடக்கிறானோ அந்த அளவுக்கு நேசிக்கப்படுவான். எந்த அளவுக்கு அல்லாஹ்வுக்கு மாறு செய்கிறானோ அந்த அளவுக்கு வெறுக்கப்படுவான்.சிலபோது ஒரு மனிதன் ஒரே சமயத்தில் இறைவனுக்குக் கட்டுப்பட்டும் மாறு செய்தும் நடப்பதனால் ஒரே சமயத்தில் அவன்

நேசிக்கப்படவும் செய்கிறான் வெறுக்கப்படவும் செய்கிறான். மனிதர்களை ஒருவன் நேசிப்பதும், வெறுப்பதும் இறை மார்க்கத்தின் அடிப்படையில் அமைந்திருக்க வேண்டும்.

## ஒரு வசனத்திற்குரிய விளக்கம்

‘நாங்கள் நம்பிக்கை கொண்டோம்’ என்று கிராமவாசிகள் கூறுகின்றனர். “நீங்கள் நம்பிக்கை கொள்ளவில்லை, மாறாக, ‘நாங்கள் கட்டுப்பட்டோம்’ என்று கூறுங்கள். நம்பிக்கை உங்கள் இதயங்களில் நுழையவில்லை.” என்று (நபியே!) நீர் (அவர்களிடம்) கூறும்: (49:14)

4. ஸஅத் பின் அபீவக்காஸ் (ரலி) அறிவிப்பதாவது: நபி (ஸல்) அவர்கள் ஒரு குழுவினருக்கு (அன்பளிப்பு) வழங்கினார்கள். அப்போது நான் அங்கு அமர்ந்திருந்தேன் அவர்களில் ஒருவரை (கொடுக்காமல்) விட்டுவிட்டார்கள். அவரோ அவர்களில் எனக்குப் பிரியமானவர். ‘அல்லாஹ்வின் தூதரே! ஏன் அவரை விட்டுவிட்டீர்கள்? அல்லாஹ்வின் மீது ஆணையாக நிச்சயமாக நான் அவரை மு.:.மின் என்றே கருதுகிறேன்’ என்று நான் கூறினேன். அதற்கு நபி (ஸல்) அவர்கள், “அவரை முஸ்லிம் என்று சொல்” என்றார்கள்.

சிறிது நேரம் நான் மௌனமாக இருந்தேன். பிறகு நான் அவரைப் பற்றி அறிந்திருந்த விஷயங்கள் என்னையும் அறியாமல் என் நாவில் வந்தபோது முன்பு சொன்னதையே திரும்பவும் சொன்னேன்: ‘அந்த மனிதரை ஏன் விட்டு விட்டீர்கள்? இறைவன் மீது ஆணையாக நிச்சயமாக நான் அவரை மு.:.மின் என்றே கருதுகிறேன்.’ அதற்கு அவர்கள், “அவரை முஸ்லிம் என்றும் சொல்” என்றார்கள்.

பிறகு அவரைப் பற்றி நான் அறிந்து வைத்திருந்த விஷயம் என்னை மீறவே மீண்டும் மீண்டும் சொன்னதையே சொன்னேன். அதற்கு நபி(ஸல்)அவர்கள் பழைய பதிலையே கூறிவிட்டு, “ஸஅதே! நான் ஒரு மனிதருக்குக் கொடுக்கிறேன்; ஆனால் நான் கொடுக்காதவர் என்னிடம் அவரை விடவும் மிக விருப்பமானவராக இருக்கிறார். (அவருக்கு நான் கொடுத்ததற்குக்) காரணம், ஏதும் கொடுக்காதிருந்தால் (குற்றம் இழைத்து அதனால்) அவரை இறைவன் நரகில் முகம் குப்புறத் தள்ளிவிடுவானோ என்ற அச்சம் தான் என்றார்கள். (புகாரி-27, முஸ்லிம்-150)

**இந்நபிமொழியிலிருந்து பெறப்படும் விஷயங்கள்:**

இஸ்லாத்தை விட ஈமான் உயர்ந்தது. ஒவ்வொரு மு.:.மினும் முஸ்லிமாவான்; ஆனால் ஒவ்வொரு முஸ்லிமும் மு.:.மினாக முடியாது. மார்க்க அறிஞரிடம் உரையாடுவது, சந்தேகத்தை நீக்கிக் கொள்வதற்காக ஒரு தடவைக்குப் பல தடவை ஒரு விஷயத்தைத் திரும்பத் திரும்ப அவரிடம் கேட்பது; இது அவரை சங்கடத்தில் ஆழ்த்தாதவரை கூடும். இவ்வுலகப் பொருட்களை இறைத்தூதர் மக்களுக்கு அன்பளிப்பாக வழங்குவது அவர்களுடைய ஈமானின் தரத்தைப் பொறுத்ததல்ல.

பொருள் மூலம் பிரச்சாரம் செய்வது. பொருள் மூலம் உள்ளங்களை ஈர்ப்பது. தமது சமுதாயத்தின் மீது நபி (ஸல்) கொண்ட அக்கறையும் கருணையும் இங்கு சுட்டிக்காட்டப் பட்டுள்ளது. மார்க்க அறிஞர் தம் மக்களுக்கு சந்தேகங்களை தெளிவுபடுத்தி, தான் சொல்லும் கருத்துக்களை விவரித்துக் கூறுவது. ஒருவர் தன் உள்ளத்தில் எழுகின்ற நெருடல்களை (தயங்காமல்) அறிஞரிடம் எடுத்துக் கூறுவது-அதனை அவர்

நீக்குவதற்காக. சமுதாயத் தலைவர் பொதுச் சொத்தை மக்கள் நலன் கருதி மார்க்கத்திற்கு உதவும் அம்சங்கள் உள்ள பொதுக் காரியங்களுக்கு செலவு செய்வது.

## இஸ்லாத்தை ஏற்றுக் கொள்ளுங்கள்

நம்பிக்கை கொண்டோரே! இஸ்லாத்தில் முழுமையாக நுழையுங்கள். ஷைத்தானின் அடிச்சுவடுகளைப் பின்பற்றாதீர்கள். அவன் உங்களுக்குப் பகிரங்க எதிரி. (2:208)

5. "முஹம்மதுடைய உயிர் எவன் வசம் உள்ளதோ அவன் மீது சத்தியமாக! இந்த சமுதாயத்தில் யூதரோ, கிறிஸ்தவரோ என்னைப் பற்றிக் கேள்விப்பட்டு நான் கொண்டு வந்த மார்க்கத்தை நம்பாமல் மரணித்துவிட்டால் அவர் நரகவாசியே" என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரலி),
நூல்: முஸ்லிம்-153, அஹ்மத்

**இந்நபிமொழியில் அடங்கியுள்ள கருத்துக்கள்:**

நபிகள் நாயகம்(ஸல்)அவர்கள் விடுத்த ஏகத்துவ அழைப்பு இவ்வுலகிலுள்ள எல்லா மதத்தவருக்கும் எல்லா மனிதர்களுக்கும் பொதுவானதாகும். நபி (ஸல்) அவர்கள் கொண்டு வந்த மார்க்கம் அதற்கு முன் சென்ற அனைத்து மார்க்கங்களையும் மாற்றிவிட்டது. (மக்கள் ஆட்சேபிக்க வழியில்லாத வகையில்) ஆதாரத்தை நிலைநாட்டுவதற்காக பிரச்சாரத்தை எத்திவைப்பது அவசியமாகும். ஒரு விஷயத்தை உறுதி செய்வதற்கு சத்தியம் செய்யுமாறு கோரப்படாமலேயே சத்தியம் செய்வது. அல்லாஹ்வுக்கு "கை" இருக்கிறது என்பது நிரூபணமாகிறது. அது அவனுடைய கண்ணியத்திற்கும் மகத்துவத்திற்கும் ஏற்ற வகையில் ஆகும்.

நபி (ஸல்) அவர்களின் பிரச்சாரம் எவர்களுக்கு எட்ட வில்லையோ அவர்களின் விவகாரம் அல்லாஹ்விடம் இருக்கிறது. (அவன் நாடினால் அவர்களை மன்னிப்பான் அல்லது தண்டிப்பான்) நபி (ஸல்) அவர்கள் அனுப்பப்பட்ட பிறகு (அவர்களின் மார்க்கத்தைத் தவிர உள்ள) ஏனைய மார்க்கங்கங்கள் அனைத்தும் தவறானவையாகும். அல்லாஹ் கூறுகிறான்: "இஸ்லாம் அல்லாத மார்க்கத்தை யாரேனும் விரும்பினால் அவரிடமிருந்து அது ஏற்கப்பட மாட்டாது; அவர் மறுமையில் நஷ்டமடைந்தவராக இருப்பார்." (3:85)

6. "மக்கள் வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை என்றும் முஹம்மத் அல்லாஹ்வின் தூதர் என்றும் உறுதியாக நம்பி, தொழுகையை நிலை நிறுத்தி, ஸகாத்தும் கொடுக்காத வரை அவர்களுடன் நான் போர் புரியுமாறு ஏவப்பட்டுள்ளேன். இவற்றை அவர்கள் செய்து விட்டால் தமது உயிர், உடைமைகளை என்னிடமிருந்து பாதுகாத்துக் கொள்வர். இஸ்லாத்தின் வேறு உரிமைகளில் (அவர்கள் வரம்பு மீறினாலே) தவிர! மேலும் அவர்களின் கணக்கு அல்லாஹ்விடம் உள்ளது" என்று நபிகள் நாயகம் (ஸல்)அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர்: இப்னு உமர்(ரலி), நூல்: புகாரி-25, முஸ்லிம்-22

### இந்த ஹீஸில் கூறப்பட்டுள்ள செய்திகள் வருமாறு:

நபி(ஸல்)அவர்கள் அல்லாஹ் ஏவாமல் எதையும் செய்ய மாட்டார்கள். அவர்கள் எடுத்துச் சொல்பவர்களாகவும், தம் இறைவனின் கட்டளைகளை நிறைவேற்றுபவர்களாகவும் உள்ளார்கள். நற்செயல்கள் ஈமானைச் சேர்ந்தவையாகும். தொழுகையை விட்டவனும் ஸகாத்தை மறுத்தவனும் கா∴பிர்

ஆவான். ஏகத்துவம்தான் நற்செயல்களில் முதன்மையானது. இந்த ஹதீஸில் முர்ஜிஆக்களுக்கு மறுப்பு இருக்கிறது. காரணம் அவர்கள் ஈமானை விட்டும் நற்செயலைப் பிரித்து விட்டனர். தொழுகையை விட்டவர்களுடனும், ஸகாத்தை மறுத்தவர்களுடனும் போர் புரிய வேண்டும். ஏனெனில் தொழு கைக்கும் ஸகாத்துக்கும் இடையில் வேறுபாடு கிடையாது. ஸகாத் தர மறுத்தவர்களுடன் போர் புரிவதற்கு அபூபக்கர்(ரலி) இந்த ஹதீஸைத் தான் ஆதாரமாக எடுத்துக் கொண்டார்கள்.

ஒரு முஸ்லிம் (இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டதன் மூலம் இஸ்லாமிய ஆட்சியில்) வெளிப்படையில் தன் உயிரையும் உடைமையையும் காத்துக் கொள்கிறான். ஆனால் அவனது அந்தரங்க விஷயம் அல்லாஹ்வின் பொறுப்பில் உள்ளது. நயவஞ்சகர்களுடன் போர் புரியக் கூடாது என்பதற்கும் இந்த ஹதீஸை ஆதாரமாகக் கொள்ளலாம். காரணம் அவர்கள் வெளிப்படையில் இஸ்லாமிய காரியங்களைச் செய்கிறார்கள். ஆயினும் அவர்களின் விவகாரம் அல்லாஹ்வின் பொறுப்பில் உள்ளது. இந்த ஹதீஸில் வணக்கத்திற்குரிய இறைவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை என உறுதியாக நம்புவது என்று மட்டும் கூறப்பட்டிருந்தால் அது முஹம்மத் (ஸல்) அவர்களை நம்புவதையும் உள்ளடக்கிக் கொள்ளும்.

7. அனஸ் (ரலி) அறிவிப்பதாவது: நபி (ஸல்) அவர்கள் அவர்கள் ஒரு மனிதரிடம், “நீ இஸ்லாத்தை ஏற்றுக்கொள்” என்றார்கள். அதற்கவர், ‘எனக்கு வெறுப்பாகத் தோன்றுகிறது’ என்றார். “உனக்கு வெறுப்பாக இருந்தாலும் நீ இஸ்லாத்தை ஏற்றுக்கொள்” என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

நூல்: அஹ்மத், ஸில்ஸில...அஸ்ஸஹீஹா-1454

**இந்நபிமொழியில் அடங்கியுள்ள செய்திகள் வருமாறு:**

ஒருவன் நற்செயல்களைச் செய்ய தன்னை நிர்ப்பந்திப்பது கடமையாகும். நற்செயல்களை செய்வதற்கு முந்த வேண்டும். அவனது உள்ளத்திற்கு அது பாரமாகத் தோன்றினாலும் சரி. ஒருவனுடைய கடைசி காலகட்டம் பரிபூரணமாக அமைந்ததா என்பதே கவனிக்கப்படும்.அவனுடைய ஆரம்ப காலகட்டத்தின் குறைகள் கவனிக்கப்பட மாட்டாது. சிந்திப்பதற்கும் ஆதாரம் தேடுவதற்கும் முன் இஸ்லாத்தைத் தழுவுவது ஒரு மனிதன் மீது கடமையாகும். சிலபோது விருப்பமில்லாத மனதோடு நற்செயல் செய்தாலும் அது சரியானதாக ஆகிவிடும்.

## இஸ்லாத்தின் சிறப்பு

8. இப்னு ஷமாஸா அறிவிப்பதாவது: நாங்கள் அம்ரு பின் ஆஸ் (ரலி) அவர்கள் மரண தருவாயில் இருக்கும்போது அவர்களிடம் சென்றோம். அவர்கள் நீண்ட நேரம் அழுதார்கள். சுவரை நோக்கி தமது முகத்தைத் திருப்பிக் கொண்டார்கள். அப்போது அவர்களது மகன், ‘என் அருமைத் தந்தையே! நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் உங்களுக்கு இவ்வாறெல்லாம் நற்செய்தி சொல்லவில்லையா? நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் உங்களுக்கு இவ்வாறெல்லாம் நற்செய்தி சொல்லவில்லையா?’ என்றார்.

உடனே அவர்கள் தமது முகத்தை முன் பக்கமாகத் திருப்பிக் கொண்டு, ‘நாங்கள் வணக்கத்திற்குரிய இறைவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை என்றும் முஹம்மத் (ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் என்றும் நம்புவதைத் தான் சிறந்த காரியமாகக் கருதினோம். உண்மையில் மூன்று நிலைகளை நான் கடந்திருக்கிறேன். என்னை விட நபிகள் நாயகம் (ஸல்) அவர்களை மிகக் கடுமையாக

வெறுத்தவர் வேறு யாரும் இருக்க முடியாது. அவர்களைக் கொலை செய்ய எனக்கு வாய்ப்பு கிடைத்தால் அவர்களைக் கொல்வதை விடவும் எனக்கு விருப்பமானது எதுவும் இருந்தது கிடையாது. அந்நிலையில் நான் மரணித்திருந்தால் நான் நரகத்திற்குரியவராகி இருப்பேன்.

என் உள்ளத்தில் இஸ்லாத்தை ஏற்கும் எண்ணத்தை அல்லாஹ் ஏற்படுத்தியவுடன் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் இடம் சென்று, 'உங்கள் கையை நீட்டுங்கள்! உங்களிடம் பைஅத் (உறுதிமொழி) செய்கிறேன்' என்று கூறினேன். நபிகள் நாயகம்(ஸல்) அவர்கள் தமது வலது கையை நீட்டியதும் என் கையை நான் மடக்கிக் கொண்டேன். அதைக் கண்ட நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், "அம்ரே! உனக்கு என்ன நேர்ந்து விட்டது?" என்று கேட்டார்கள். நான் சொன்னேன்: 'ஒரு நிபந்தனை!' "என்ன நிபந்தனை?" என்று கேட்டார்கள். 'என் பாவங்கள் (அனைத்தும்) மன்னிக்கப்பட வேண்டும்' என்றேன். அதற்கு அவர்கள், "இஸ்லாத்தை ஏற்பது அதற்கு முன்னுள்ள பாவங்களைத் தகர்த்துவிடுகிறது; ஹிஜ்ரத் செய்வது அதற்கு முன்னுள்ள பாவங்களை அழித்து விடுகிறது; ஹஜ் செய்வது அதற்கு முன்னுள்ள பாவங்களை மன்னித்து விடுகிறது என்பது உமக்குத் தெரியாதா?" என்று கேட்டார்கள்.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்களை விடவும் எனக்குப் பிரியமானவர், என் கண்களுக்கு மிகவும் கண்ணியத்திற் குரியவர் யாரும் கிடையாது. அவர்களின் கண்ணியம் கருதி அவர்களை நான் முழுமையாகப் பாரக்க முடிந்ததில்லை. அவர்களை வர்ணிக்குமாறு நான் கோரப்பட்டால் என்னால் இயலாது. ஏனெனில் நான் அவர்களை முழுமையாகப்

பார்த்தது கிடையாது. அந்த நிலையில் நான் மரணித்திருந்தால் நான் சொர்க்கத்திற்குரியவராக ஆகியிருப்பேன்.

அதன் பிறகு எனக்கு பல பொறுப்புகள் தரப்பட்டன. அவற்றில் எனது நிலை என்னவாக இருக்கும் என்று எனக்குத் தெரியாது. நான் மரணித்துவிட்டால் நெருப்பை எடுத்துக் கொண்டும், ஒப்பாரி வைத்துக் கொண்டும் யாரும் என்னுடன் வர வேண்டாம். என்னை அடக்கம் செய்து விட்டால் என் (கப்ரின்) மீது மணலைப் போடுங்கள். பிறகு ஒரு ஒட்டகம் அறுக்கப்பட்டு அதன் இறைச்சி பங்கிடப்படும் நேரம் வரை என் கப்ரைச் சுற்றி நின்று கொண்டிருங்கள். உங்களால் நான் தனிமையை உணராது, என் இறைவனின் தூதர்களுக்கு (வானவர்களுக்கு) என்ன பதில் சொல்வது என சிந்தித்துக் கொள்வேன்.' (முஸ்லிம்-121)

**இந்நபிமொழியில் அடங்கியுள்ள கருத்துக்கள்:**

இஸ்லாத்தைத் தழுவுவது முன் செய்த பாவங்களுக்குப் பரிகாரமாக அமையும். எவர் இஸ்லாத்தை (ஏற்று அதை) அழகுற அமைத்துக் கொண்டாரோ அவர் இஸ்லாத்தை ஏற்பதற்கு முன் செய்தவற்றுக்கு குற்றம் பிடிக்கப்பட மாட்டார். ஹிஜ்ரத் செய்வதும் பாவங்களுக்குப் பரிகாரமாக அமையும். அதுபோலவே ஹஜ்ஜும் பாவங்களுக்குப் பரிகாரமாகும்.

ஆயினும் இங்கு ஒரு சட்டப் பிரச்சனை உள்ளது. இஸ்லாத்தை ஏற்பது சிறிய, பெரிய பாவங்கள் அனைத்தையும் அழித்து விடுகிறது. ஆனால் ஹிஜ்ரத் செய்வதும், ஹஜ் செய்வதும் சிறு பாவங்களையும் பெரும் பாவங்களையும் மன்னிக்குமா என்பதில் கருத்து வேறுபாடுள்ளது. ஏனெனில் பெரும் பாவங்கள் மன்னிக்கப்படுவதற்கு தூய்மையான முறையில் தவ்பா செய்வது நிபந்தனையாகும். நற்செயல்

களும் பாவங்களை அழித்துவிடக்கூடியது. நற்செயல் எந்த அளவுக்கு மகத்தானதாக இருக்கிறதோ அந்த அளவுக்கு அது பாவங்களை அழித்துவிடுகிறது.

9. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவிப்பதாவது: 'மார்க்கங்களில் அல்லாஹ்வுக்கு மிகப் பிரியமானது எது?' என்று நபி (ஸல்) அவர்களிடம் கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள், "உண்மை வழியில் நிலைத்திருக்கும் இலகுவான (இந்த இஸ்லாமிய) மார்க்கமாகும்" எனக் கூறினார்கள். (நூல்: அஹ்மத், அதபுல் மு∴ப்ரத்-941, இப்னு ஹஜர் (ரஹ்) அவர்கள் தமது ∴பத்ஹுல் பாரியில் இதன் அறிவிப்புத் தொடர் அழகானது என்று கூறியுள் ளார்கள். பார்க்க: கிதாபுல் ஈமான், பாடம்: அத்தீனு யுஸ்ருன்.)

**இந்நபிமொழியிலுள்ள கருத்துக்கள் வருமாறு:**

நபி (ஸல்) அவர்களின் மார்க்கம் எளிமையான, இப்ராஹீம் (அலை) அவர்களின் மார்க்கத்தின் அடிப்படையில் அமைந்த சத்திய மார்க்கமாகும். நபி (ஸல்) அவர்கள் இலகுபடுத்து வதற்காகவே அனுப்பப்பட்டார்கள். சுமைகளை இறக்குவதற் காகவும், விலங்குகளை உடைப்பதற்காகவும், நேசத்தை அல்லாஹ்வுக்கே(அவனது மகத்துவத்திற்கு ஏற்ற வகையிலும் படைப்பினங்களின் நேசத்துக்கு ஒப்பாகாத விதத்திலும்) உரித்தாக்குவதற்காகவுமே அவர்கள் வந்தார்கள்.

இறைமார்க்கங்களுக்கிடையில் ஏற்றத்தாழ்வு உண்டு. மனிதர்களில் இப்ராஹீம்(அலை)அவர்களுக்கு மிகவும் நெருங் கியவர் நம்முடைய நபி முஹம்மத் (ஸல்) அவர்கள் ஆவர். இறைமார்க்கம் பலப்பிரயோகத்தைப் பயன்படுத்துவதை அடிப்படையாகக் கொண்டதல்ல. இலகுவாக நடந்து கொள்வதும், நல்லவற்றைச் சொல்வதும் விரும்பத்தக்கது.

சிரமம் கொடுப்பதையும் வெறுப்படையச் செய்வதையும் தவிர்ந்து கொள்ள வேண்டும். இதை பின்வரும் நபிமொழி உணர்த்துகிறது."இலகுவாக்குங்கள், சிரமம் கொடுக்காதீர்கள், நல்லதைச் சொல்லுங்கள், வெறுப்படையச் செய்யாதீர்கள்" என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். (புகாரி)

10. அபூஹுரைரா (ரலி) அறிவிப்பதாவது: "இம்மார்க்கம் எளிதானது. இம்மார்க்கத்தை எவரும் (தம்மீது) சிரமமானதாக ஆக்கிக் கொண்டால் அவரை அது மிகைத்து விடும். எனவே நடுநிலையை மேற்கொள்ளுங்கள், இயன்றதைச் செய்யுங்கள், நற்கூலி கிடைக்கும் என்று சந்தோஷப்படுங்கள். காலையிலும், மாலையிலும், இரவில் சிறிது நேரமும் (இறைவனிடம்) உதவி தேடுங்கள்" என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். (புகாரி-39)

**இந்நபிமொழியில் அடங்கியுள்ள கருத்துக்கள்:**

வழிபாடுகளில் நிரந்தரமாக இருப்பதற்கு, உற்சாகமான நேரங்களில் அவற்றைச் செய்வதன் மூலம் உதவி தேடிக் கொள்ள வேண்டும். சிறிதளவு நற்செயலை நிரந்தரமாகச் செய்வது அதிக அளவு நற்செயலை விட்டுவிட்டுச் செய்வதை விடச் சிறந்தது. இஸ்லாமிய மார்க்கத்தின் சிறப்பம்சங்களில் இதுவும் ஒன்றாகும். அதாவது அம்மார்க்கம் இலகுவானது; அதிலுள்ள ஏவல், விலக்கல்கள் கடைபிடிக்க இயலுமானவை. மார்க்கத்தை சிரமப்படுத்திக் கொள்ளக் கூடாது என்பதும் இந்நபிமொழியிலிருந்து தெரியவருகிறது.

மார்க்கத்தில் கூடுதல், குறைவின்றி நடுநிலையைக் கடை பிடிக்க வேண்டும். அதுதான் நேரான பாதையாகும். ஒருவன் ஒரு வணக்கத்தைப் பரிபூரணமாகச் செய்ய இயலவில்லை எனில் இயன்றவரை செய்வதற்கு அக்கறை காட்ட வேண்டும். ஒரு வணக்கத்தை, ஒரு நற்செயலை பகலின் ஆரம்ப

நேரத்தில் செய்வது சிறப்பு. காரணம் அந்நேரத்தில் சுறுசுறுப்பு ஏற்படுவதற்கும், அச்செயல் ஏற்கப்படுவதற்கும் சாத்தியக்கூறு உண்டு.

இரவில் சிறிது நேரம் நின்று வணங்குவது சிறப்பு. இது அல்லாஹ்வின் அருளால் அதன் நோக்கத்தை அடைவதற்கு உதவியாக இருக்கும். அஸருக்குப் பிறகும், மக்ரிபுக்கு முன்பும் திருக்குர்ஆன் மற்றும் திக்ருகளை ஓதுவது விரும்பத்தக்கது. ஒரு முஸ்லிம் (மார்க்கத்தில்) நடுநிலையை மேற்கொண்டும், இயன்றதைச் செய்து கொண்டும், நபிவழியைப் பற்றிப் பிடித்துக் கொண்டும் இருக்கும் காலமெல்லாம் அவனுக்கு சுபச் செய்தி உண்டு.

11. “அல்லாஹ்வை இறைவனாகவும் இஸ்லாத்தை வாழ்க்கை நெறியாகவும், முஹம்மதை நபியாகவும் ஏற்றுக் கொண்டவருக்கு சுவர்க்கம் கடமையாகி விட்டது.” நபி (ஸல்) அவர்கள் கூறியதாக அபூஸயீத் (ரலி) அறிவிக்கிறார்கள். (ஹதீஸின் சுருக்கம்), நூல்: முஸ்லிம்-1884, நஸயீ

**இந்நபிமொழி கூறும் கருத்தாவது:**

இம்மூன்று விஷயங்களையும் ஒருவர் நம்பி, தனது நம்பிக்கையில் எவ்வித களங்கமும் இல்லாமல், இம்மூன்று விஷயங்களையும் வாய்மையோடு கூறினால் அல்லாஹ் அவருக்கு சொர்க்கத்தை கடமையாக்கிவிடுவான். ஏனெனில் இஸ்லாத்தினுடைய மூன்று அடிப்படை விஷயங்களை அவர் மெய்ப்படுத்தி விட்டார். இம்மார்க்கத்தினுடைய மிகப் பெரும் அடிப்படைக் கடமைகளை நிலை நாட்டிவிட்டார். அவைதான் அல்லாஹ்வைப் பற்றிய, சத்திய மார்க்கத்தைப் பற்றிய, உண்மை நபியைப் பற்றிய நம்பிக்கையாகும்.

12. ஆயித் பின் அம்ர்(ரலி) அறிவிப்பதாவது: இவர் மக்கா வெற்றியின்போது அபூசுப்யான் (ரலி) அவர்களுடன் வந்தார். அங்கு நபி (ஸல்) அவர்களும் அவர்களைச் சுற்றி அவர்களின் தோழர்களும் இருந்தனர். அப்போது, 'இதோ அபூசுப்யானும் ஆயித் பின் அம்ரும் வந்து விட்டார்கள்' எனத் தோழர்கள் கூறினர். உடனே நபி (ஸல்) அவர்கள், "இவர்கள் ஆயித் பின் அம்ரும் அபூசுப்யானும்தான். ஆனால் இஸ்லாம் இவர்களை விட கண்ணியத்திற்குரியதாகும். இஸ்லாம் (எப்போதும்) மேலோங்கக்கூடியது, தாழ்ந்துவிடக்கூடியதல்ல" எனக் கூறினார்கள். (பைஹகீ குப்ரா-12155, அல்இர்வா.ஃ-1268)

**இந்நபிமொழியில் அடங்கியுள்ள செய்திகள் வருமாறு:**

மதங்களிலும் மார்க்கங்களிலும் மிக்க மேலானது அல்லாஹ்வுடைய சத்திய மார்க்கமாகும். முஸ்லிமல்லாத வரை விடவும் ஒரு முஸ்லிமுக்கு முன்னுரிமை கொடுக்கப்பட வேண்டும். அவரை விடவும் முஸ்லிம் சிறந்தவராகக் கருதப்பட வேண்டும். முஸ்லிமல்லாதவர் எப்படிப்பட்டவராக இருந்தாலும் சரி. அவருடைய அந்தஸ்து, மதிப்பு, பதவி, செல்வம் என்ன தான் உயர்வாக இருந்தாலும் சரி. ஏனெனில் இவை எல்லாவற்றை விடவும் இஸ்லாம் மகத்தானது.

கண்ணியப்படுத்துவதிலும், மதிப்பதிலும், நேசிப்பதிலும் முஸ்லிமுக்கும் முஸ்லிமல்லாதவருக்கும் இடையில் சமமாக நடந்து கொள்ளக் கூடாது. மாறாக முஸ்லிமுக்கு அவன் இஸ்லாத்தை ஏற்றிருப்பதனால் தனித்துவம் வழங்கப்பட வேண்டும். ஒரு முஸ்லிம் முஸ்லிமல்லாதவருக்கு வாரிசு ஆவான்; ஆனால் முஸ்லிமலாதவர் முஸ்லிமுக்கு வாரிசாக மாட்டார் என்பதற்கு இந்த ஹதீஸை சிலர் ஆதாரமாகக்

காட்டுகின்றனர். ஆயினும் இருவரும் ஒருவர் மற்றவருக்கு வாரிசாக மாட்டார் என்பதே சரியானதாகும்.

13. “ஒரு மனிதன் இஸ்லாத்தை ஏற்று அவனது இஸ்லாம் அழகு பெற்றுவிட்டால் அதற்கு முன் அவன் செய்த ஒவ்வொரு நன்மைக்கும் கூலியை அல்லாஹ் அவனுக்கு பதிவு செய்து விடுகின்றான். அவன் முன்னர் செய்த எல்லா தீமைகளும் அழிக்கப்பட்டுவிடுகின்றன. அதன் பின்னர் அவன் செய்யும் நன்மை, தீமைகளுக்கு கூலி பதிவு செய்யப்படும். ஒரு நன்மைக்கு அது போன்று பத்து முதல் எழுநூறு மடங்கு வரை கூலி பதிவு வெய்யப்படும். ஒரு தீமைக்கு அது போன்ற அளவு தீமையே பதிவு வெய்யப்படும். அதையும் அல்லாஹ் அவருக்கு மன்னித்து விட்டால் அதுவும் கிடையாது” என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். அ: அபூஸயீத் (ரலி), (நஸயீ)

**இந்நபிமொழியில் அடங்கியுள்ள விஷயங்கள்:**

இஸ்லாத்தில் சிறந்ததும் இருக்கிறது. மிகச் சிறந்ததும் இருக்கிறது. இது இஸ்லாமியக் காரியங்களுக்கிடையில் ஏற்றத்தாழ்வு இருப்பதைக் காட்டுகிறது. இந்த அடிப்படையில் ஒருவனிடம் உள்ள இஸ்லாம் அதிகரிக்கவும் செய்யும் குறையவும் செய்யும். இஸ்லாத்தை ஏற்பது அதற்கு முன் உள்ள பாவங்களைத் தகர்த்து விடுகின்றது. பாவமன்னிப்புத் தேடுவது அதற்கு முன்னுள்ள பாவங்களை மன்னிக்கிறது. நற்செயல்கள் பாவங்கள் அழிக்கப்படுவதை அவசியமாக்கு கின்றன. ஆனால் அவை அல்லாஹ்வுக்காக என தூய எண்ணத்துடனும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களைப் பின்பற்றியும் செய்யப்பட்டிருக்க வேண்டும்.

இங்கு அல்லாஹ்வின் விசாலமான கருணை சுட்டிக்காட்டப் பட்டுள்ளது. எவ்வாறெனில் அவன் ஒரு நன்மைக்கு 700

மடங்கு வரையும், ஒரு தீமைக்கு அது போன்றதொரு தீமையையும் கூலியாக ஆக்கியிருக்கின்றான். சில போது அல்லாஹ் தீமையை நன்மைக்கு ஈடாக அல்லாமல் தனது கருணையால் மன்னித்து விடுகின்றான். பெரும் பாவங்களுக்குத் தவ்பா செய்வது அவசியமாகும். வேறு ஹதீஸ்கள் மூலம் இது நிரூபணமாகின்றது. கா∴பிரிடமிருந்து எந்தச் செயலும் ஏற்றுக் கொள்ளப்பட மாட்டாது. இது தெரிந்த விஷயம்தான். ஆயினும் இந்த நபிமொழி இதற்குச் சான்றாக உள்ளது. பொதுவாகச் சொல்லப்பட்ட இந்த ஹதீஸிலும் இதுபோன்ற ஹதீஸிலும் பெண்களும் அடங்குவர். ஏனெனில் மனிதன் என்ற வார்த்தையில் ஆண், பெண் இருவரும் அடக்கம்.

14. ‘அல்லாஹ்வின் தூதரே! அறியாமைக் காலத்தில் நாங்கள் செய்தவற்றுக்காக குற்றம் பிடிக்கப்படுவோமா?’ என ஒருவர் (நபி (ஸல்) அவர்களிடம்) கேட்டார். அதற்கு நபி (ஸல்) அவர்கள், “யார் இஸ்லாத்தில் நல்ல முறையில் நடந்து கொண்டாரோ அவர் அறியாமைக் காலத்தில் செய்தவற்றுக்காக குற்றம் பிடிக்கப்பட மாட்டார். யார் இஸ்லாத்தில் தீய முறையில் நடந்து கொண்டாரோ அவர் முன்னர் செய்தவற்றுக்காகவும் பின்னர் செய்தவற்றுக்காகவும் குற்றம் பிடிக்கப்படுவார்” என்று கூறினார்கள்.

அறிவிப்பவர்: இப்னு மஸ்வூத் (ரலி),

நூல்: புகாரி-6921, முஸ்லிம்-120, இப்னு மாஜா-4242, அஹ்மத்

**இந்த நபிமொழி கூறும் கருத்து வருமாறு:**

இஸ்லாத்தை ஏற்பது அறியாமைக் காலத்தில் செய்த பாவங்களை அழித்து விடுகிறது. இது யார் இஸ்லாத்தை ஏற்று அதில் நல்ல முறையில், நடுநிலையாக நடந்து

கொண்டாரோ அவருக்குத் தான் எனத் தெளிவுபடுத்தப்பட் டுள்ளது. இஸ்லாத்தில் வாய்மையோடும், அதன் காரியத்தில் உறுதியுடனும் நிலைத்து நிற்காத வரை வெறும் இஸ்லாமிய மார்க்கத்தைத் தழுவுவது மாத்திரம் பாவங்கள் அழிக்கப்படு வதற்கு போதுமாகாது. இஸ்லாத்தை ஏற்றுக் கொண்ட பிறகு தமக்குத் தாமே அநீதம் இழைத்துக் கொண்டவர்களிடம் அவர்கள் அறியாமைக் காலத்தில் செய்த தீமைகள் (மன்னிக் கப்படாமல்) எஞ்சியிருக்கும். இந்நபிமொழியில் மாறு செய்தல் மற்றும் பாவம் செய்வதன் துர்ப்பாக்கியமும் பாவங்களிலேயே மூழ்கிவிடுவதனுடைய அபாயமும் சொல்லப்பட்டுள்ளது.

15. ‘அல்லாஹ்வின் தூதரே! அறியாமைக் காலத்தில் தான தர்மம் செய்தல், அடிமையை விடுதலை செய்தல், உறவினர்களை அனுசரித்தல் போன்ற காரியங்களை வணக்கமாகக் கருதிச் செய்தேன். அது பற்றி தங்கள் கருத்து என்ன? அவற்றுக்குக் கூலி கிடைக்குமா?’ என ஹகீம் பின் ஹிஸாம் (ரலி) (நபி (ஸல்) அவர்களிடம்) கேட்டார்கள். அதற்கு நபி(ஸல்)அவர்கள், “இஸ்லாத்தை ஏற்பதற்கு முன் நீர் செய்த நற்செயல்க(ளுக்கான பிரதிபலன்)களுடனேயே இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டுள்ளீர்” என்று கூறினார்கள்.

அறிவிப்பவர்: ஹகீம் பின் ஹிஸாம் (ரலி),
நூல்: புகாரி-1436, முஸ்லிம்-123

**இந்நபிமொழியில் உள்ள செய்திகள் வருமாறு:**

ஒருவர் இஸ்லாத்தைத் தழுவும்போது அதற்கு முன்பு அவர் செய்த நன்மைகளுக்கும் அல்லாஹ்வின் அருளால் நற்கூலி பதிவு செய்யப்படும். இஸ்லாம் நற்செயல்களை முழுமைப்படுத்துகிறது. தீயசெயல்களை அழிக்கிறது. நல்ல சொற்களையும் செயல்களையும் நிலைநிறுத்திக்

கொள்வதற்காகவும், தீய சொற்களையும் செயல்களையும் அழித்தொழிப்பதற்காகவும் இஸ்லாம் வந்துள்ளது.

"நற்குணங்களை முழுமைப்படுத்துவதற்காகவே நான் அனுப்பப்பட்டுள்ளேன்" என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரலி), நூல்: பைஹகீ-20782

16. "எந்தப் பொருளுடன் ஒருவர் இஸ்லாத்தைத் தழுவு கிறாரோ அப்பொருள் அவருக்குரியதே." -நபிமொழி (பைஹகீ-18259, அல்இர்வா.:.-1716) அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரலி),

**இந்த ஹதீஸின் கருத்து:**

தன்னிடம் உள்ள அனந்தரச் சொத்து, நிலம் மற்றும் ஏனைய சொத்துக்களுடன் இஸ்லாத்தைத் தழுவுகின்ற ஒவ்வொருவருக்கும் அப்பொருட்கள் அவருக்குரியவையே. அது விஷயத்தில் அவருடைய வாதம் ஏற்கத்தக்கதே; அவ்வாதத்திற்கு மாற்றமாக ஏதும் நிரூபணமாகத வரை. இஸ்லாம் உரிமைகளைக் காப்பதற்கும் நியாயமான உடன்படிக்கைகளையும் ஒப்பந்தங்களையும் செல்லுபடி யாக்குவதற்குமே வந்துள்ளது.

17. ஸஹ்ரு இப்னு அப்லா (ரலி) அறிவிக்கிறார்கள்: இஸ்லாம் வந்தபோது பனூ ஸுலைம் கிளையாரின் ஒரு கூட்டத்தினர் தங்களது நிலத்தை விட்டுவிட்டு ஓடிவிட்டனர். நான் அதனை எடுத்துக் கொண்டேன். பிறகு அவர்கள் இஸ்லாத்தை ஏற்றவுடன் அந்த நிலம் தொடர்பாக என்னிடம் தகராறு செய்து வழக்கை நபி (ஸல்) அவர்களிடம் கொண்டு சென்றனர். நபி(ஸல்)அவர்கள் அந்த நிலத்தை அவர்களுக்கு திரும்பப் பெற்றுக் கொடுத்தார்கள். மேலும் "ஒரு மனிதர் இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டால் அவருடைய நிலத்துக்கும்

சொத்துக்கும் அவரே அதிக உரிமை படைத்தவர்” என்றும் கூறினார்கள். (அஹ்மத், ஸில்ஸிலதுல்...ஸஹீஹா-1230)

**இந்த நபிமொழியில் உள்ள கருத்துக்கள்:**

மக்கள் இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டு விட்டால் அவர் களுடைய (பழைய) சொத்துக்களுக்கும் உடைமைகளுக்கும் அவர்களையே உரிமையாளர்களாக ஆக்கப்படும். அவற்றை அவர்களிடமிருந்து பறிக்கப்பட மாட்டாது. இஸ்லாத்திற்கு முன்னுள்ள ஒருவரது உடைமை சம்பந்தமான தஸ்தா வேஜுகள் ஷரீஅத்திற்கு முரணில்லாத போது அவற்றையே செல்லுபடியாக்கப்படும், அவற்றை அப்படியே வைத்துக் கொள்ளப்படும். மக்கள் இஸ்லாத்தை ஏற்றுக் கொண்ட பிறகு முன்பு அவர்களிடமிருந்த உடைமைகள், அசையாச் சொத்துக்கள், வீடுகள் விஷயத்தில் அவர்களுடைய வாதம் ஏற்றுக் கொள்ளப்படும். செல்வமும், அசையாச் சொத்தும் அதற்கு உரியவரைத் தொடர்பவையாகும்.

## இஸ்லாத்தின் அடிப்படைக் கடமைகள்

“இஸ்லாம் ஐம்பெரும் கடமைகள் மீது நிறுவப்பட்டுள்ளது. அவை வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை, முஹம்மத் அல்லாஹ்வுடைய தூதர் என்றும் உறுதியாக நம்புவது, தொழுகையை நிலை நாட்டுவது, ஸகாத் கொடுப்பது, ஹஜ் செய்வது, ரமலானில் நோன்பு நோற்பது ஆகியவையாகும்” என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். (புகாரி-8, முஸ்லிம்-16)

அறிவிப்பவர்: இப்னு உமர் (ரலி),

**இந்நபிமொழி கூறும் கருத்துக்கள் வருமாறு:**

நற்செயல்கள் ஒன்றை விட மற்றொன்று சிறப்புடையதாக உள்ளது. அவற்றில் முக்கியமானவையும் உள்ளன; மிக முக்கியமானவையும் உள்ளன. இன்னும் முதல் நிலைக் கடமைகள், இரண்டாம் நிலைக் கடமைகள், உபரியானவை எனவும் உள்ளன. இஸ்லாத்தின் அடிப்படைக் கடமைகள் ஐந்தாகும். இதற்கு மாற்றமாக சிலர் கூட்டிக் குறைத்துச் சொல்கின்றனர். நற்செயல்கள் ஈமானில் அடங்கும். ஆனால் முர்ஜியாக்களின் கருத்து இதற்கு மாறானதாகும். அல்லாஹ்வையும் அவன் தூதரையும் நம்புவதற்கு முன்னதாக சிந்திக்கவோ ஆதாரம் தேடவோ அவசியமில்லை.

இஸ்லாத்தின் அடிப்படைக் கடமைகளை எவன் நிறைவேற்றுகிறானோ அவன் முஸ்லிமாவான். (அக்கடமைகளைப் பற்றிய நம்பிக்கை அவன் உள்ளத்தில் இல்லாமல்) வெளிப் படையில் அவற்றை அவன் நிறைவேற்றினால் வெளிப் படையில் அவன் முஸ்லிமாவான். அக்கடமைகளை நம்பிச் செயல்படுத்தினால் அவன் வெளிப்படையிலும் அந்தரங் கத்திலும் முஸ்லிமாக ஆகிவிடுவான். சில சமயம் நபிமொழி நபி(ஸல்)அவர்கள் சொன்ன மாதிரி இல்லாமல் கருத்தாகவும் அறிவிக்கப்படுகிறது. காரணம் சில அறிவுப்புகளில் ஹஜ் கடைசியாகவும் அதற்கு முன் நோன்பும் வந்துள்ளது. அடிப்படைக் கடமைகளில் முதல் கடமை ஏகத்துவ சாட்சியாகும். இச்சாட்சியை மொழியாமல் இதற்கு அடுத்துள்ள காரியங்களைச் செய்வது சரியாக ஆகாது.

## இஸ்லாத்தின் அடையாளச் சின்னங்கள்

19. “இஸ்லாத்திற்கு சாலை அடையாளங்களைப் போல சில அடையாளங்கள் உள்ளன. அவற்றில் அல்லாஹ்வை நம்புதல், அவனுக்கு எதையும் இணைகற்பிக்காதிருத்தல்.

தொழுகையை நிலை நாட்டுதல், ஸகாத் கொடுத்தல், ரமலானில் நோன்பு நோற்றல், இறையாலயத்தை ஹஜ் செய்தல், நன்மையை ஏவி, தீமையைத் தடுத்தல், வீட்டிற்குள் நுழைந்தால் வீட்டிலுள்ளவர்களுக்கு ஸலாம் சொல்லுதல், ஒரு கூட்டத்தினரைக் கடந்து சென்றால் அவர்களுக்கு ஸலாம் சொல்லுதல் ஆகியவை அடங்கும். இவற்றில் ஏதேனும் ஒன்றை ஒருவன் விட்டுவிட்டால் இஸ்லாத்தில் ஒரு பங்கை விட்டவனாவான். இவை அனைத்தையும் ஒருவன் விட்டு விட்டால் இஸ்லாத்தைப் புறந்தள்ளியவனாவான்" என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரலி), (இதனை இமாம் காஸிம் பின் ஸுல்லாம் (ரஹ்) அவர்கள் "ஈமான்" என்ற நூலில் அறிவித்து உள்ளார். பார்க்க: ஸில்ஸிலதுல் அஹாதீஸ் அஸ்ஸஹீஹா-333)

**இந்நபிமொழியில் அடங்கியுள்ள செய்திகள் வருமாறு:**

இஸ்லாத்தினுடைய சில கடமைகள் கூறப்பட்டுள்ளன. இஸ்லாத்திற்கு வெளிப்படையான சில அடையாளங்கள் உள்ளன. அவற்றைக் கொண்டே ஒரு முஸ்லிம் இனம் காட்டப்படுகிறான். உதாரணமாக தொழுகை, ஸகாத், நோன்பு போன்றவை. இம்மார்க்கத்தில் முஸ்லிமையும் முஸ்லிம் அல்லாதவரையும் பிரித்துக் காட்டக்கூடிய வெளிப்படையான சில அடையாளங்களும் உள்ளன. இந்நபிமொழியில் இஸ்லாத்தினுடைய சிறப்பு கூறப்பட்டுள்ளது. இஸ்லாம் ஏனைய மதங்களை விட தனித்துவம் பெற்றுள்ளது. இஸ்லாத்திற்கு இருக்கின்ற சிறப்பு மற்றும் அந்தஸ்தின் காரணமாக ஏனைய மதங்களுக்கு மத்தியில் அதற்குப் பல சிறப்பம்சங்கள் உள்ளன.

20. நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: "யார் நம்முடைய தொழுகையைத் தொழுது, நம்முடைய கிப்லாவை முன்னோக்கி, நாம் அறுத்தவற்றைச் சாப்பிடுகிறாரோ அவர் தாம் முஸ்லிம். அப்படிப்பட்டவர் அல்லாஹ் மற்றும் அவன் தூதருடைய பொறுப்பில் இருக்கிறார். எனவே அல்லாஹ்வுக்கு அவன் பொறுப்பு விஷயத்தில் மோசம் செய்து விடாதீர்கள்."
அறிவிப்பவர்: அனஸ் (ரலி), நூல்: புகாரி-391

**இந்த ஹதீஸில் கூறப்பட்டுள்ள செய்திகள் வருமாறு:**

தொழுகையை விட்டவன் முஸ்லிமல்ல. அவன் அல்லாஹ் மற்றும் அவன் தூதரின் பொறுப்பில் இல்லை. இஸ்லாத்தி னுடைய வெளிப்படையான அடையாளம் தொழுகையாகும். தொழுகையையும் அறுத்துப் பலியிடுவதையும் இங்கு சேர்த்து சொல்லப்பட்டிருப்பதன் காரணம் அவை ஏகத்துவத்தின் அடையாளமாகும் என்பதால்.

அல்லாஹ் கூறுகிறான்: "(நபியே) நீர் கூறும்! என்னுடைய தொழுகையும் என்னுடைய குர்பானியும் எனது வாழ்வும் எனது மரணமும் அகிலங்களில் அதிபதியான அல்லாஹ் வுக்கே உரியனவாகும்." (6:162)

மேலும் கூறுகிறான்: உம் இறைவனுக்காகத் தொழுது, குர்பானியும் கொடுப்பீராக. (108:2)

இணைவைப்பாளர்கள் அதிகமாக ஈடுபட்டு வந்த ஷிர்க்கான காரியங்கள் அல்லாஹ் அல்லாதவருக்கு சிரம் பணிவதும் அல்லாஹ் அல்லாதவருக்கு அறுத்துப் பலியிடுவதும் தான். அதன் பிறகு தொழுவதையும் அறுத்துப் பலியிடுவதையும் அல்லாஹ்வுக்கு மட்டுமே உரித்தாக்க வேண்டும் என்ற கட்டளையுடன் ஏகத்துவம் வந்தது.

தொழுகையாளிகளின் பொறுப்புக்கு ஒரு முஸ்லிம் மேசடி செய்வது கூடாது. பிற முஸ்லிம்களுடன் சேர்ந்து தாமும் தொழுகையை நிலைநாட்டும்போது (இஸ்லாமிய ஆட்சியில்) ஒருவர் தனது உயிரை காத்துக் கொள்வார்; தக்க காரணம் இருந்தாலே தவிர. மக்களின் நிலையைக் கணிப்பதற்கு அவர்களின் வெளிப்படையான செயல்களைத் தவிர வேறு அளவுகோல் இல்லை.

21. ஒரு மனிதர் நபி (ஸல்) அவர்களிடம், ‘இஸ்லாத்தில் சிறந்த அம்சம் எது?’ என வினவினார். அதற்கவர்கள், “நீர் உணவளிப்பதும், அறிந்தவருக்கும் அறியாதவருக்கும் நீர் ஸலாம் சொல்லுவதும் ஆகும்” என பதிலளித்தார்கள்.

அறிவிப்பவர்: அப்துல்லாஹ் பின் அம்ர் (ரலி),
நூல்: புகாரி-28, முஸ்லிம்-39

**இந்நபிமொழியில் அடங்கியுள்ள விபரங்கள் வருமாறு:**

இஸ்லாமியக் காரியங்களுக்கிடையில் ஏற்றத்தாழ்வு உண்டு. உணவளிப்பதற்கு ஆர்வமூட்டப்பட்டுள்ளது. அது செயல்களில் மிகச் சிறந்ததாகும். கேள்வி கேட்பவர்களையும் நிலைமைகளையும் கவனித்து பல்வேறு பதில்களைத் தருவது. அறிந்தவருக்கு ஸலாம் சொல்லுவது மார்க்கமாக்கப் பட்டுள்ளது. பொதுவாக அறிந்தவருக்கும் அறியாதவருக்கும் ஸலாம் சொல்ல வேண்டும். நற்செயல்களும் நற்பண்புகளும் இஸ்லாத்தில் உட்பட்டவையாகும். சிறிதளவு நற்செயல்கள் தூய எண்ணத்துடனும் பரிபூரணமான முறையிலும் செய்யப் படுவதன் காரணமாக மகத்தானதாக ஆகிவிடுகின்றன. மக்களுக்கு முந்திக் கொண்டு ஸலாம் சொல்பவருடைய சிறப்பு இங்கு சுட்டிக்காட்டப்பட்டுள்ளது.

22. “எவருடைய நாவிலிருந்தும், கையிலிருந்தும் பிற முஸ்லிம்கள் பாதுகாப்புப் பெறுகிறார்களோ அவரே (உண்மையான) முஸ்லிம். யார் அல்லாஹ் தடை செய்த வற்றிலிருந்து ஒதுங்கிக் கொள்கிறாரோ அவரே முஹாஜிர் (துறந்தவர்)” என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். (புகாரி-10)
அறிவிப்பவர்: அப்துல்லாஹ் பின் அம்ர் (ரலி),

**இந்த நபிமொழியில் அடங்கியுள்ள கருத்துக்கள்:**

தன் சகோதர முஸ்லிம்களுக்குத் தொல்லை தராதவனே (முழுமையான) முஸ்லிம். தொல்லை தரும் உபகரணங்களில் மிகவும் ஆபத்தானது கையும் நாவும் ஆகும். முஸ்லிம் களுக்குத் தொல்லை தருவது பெரும் பாவங்களில் ஒன்று. தீங்கிழைப்பதை விட்டும் விலகியிருப்பது உத்தமர்களின் செயலாகும். ஒரு முஸ்லிமிடமுள்ள இஸ்லாம் அவனைப் பாவங்களை விட்டும், தவறுகளை விட்டும் தடுக்கிறது. தன் சகோதர முஸ்லிம்களுடன் இணக்கமாகச் செல்வது முஸ்லிமின் பண்புகளில் ஒன்றாகும்.

உண்மையில் ஹராமானவைகளை விட்டொழித்து, தடுக்கப்பட்டவைகளிலிருந்து விலகி, பாவங்களிலிருந்தும், தவறுகளிலிருந்தும், மாறு செய்வதிலிருந்தும் தன்னைத் தடுத்துக் கொண்டு, செய்த பாவங்களுக்காக மன்னிப்புத் தேடி, திரும்பவும் பாவங்கள் செய்யாமல் தன்னைக் காத்துக் கொண்டவன் எவனோ அவனே முஹாஜிர். இந்நபிமொழி விளக்கியதுபோல ஹிஜ்ரத் (துறத்தல், வெறுத்தல்) உடைய உண்மை நிலை இதுவேயாகும்.

## ஏகத்துவம் பற்றிய கட்டளை

23. நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: யஹ்யா (அலை) அவர்களுக்கு அல்லாஹ் ஐந்து கட்டளைகளைச் செய்யும்படியும், அவற்றைச் செய்யுமாறு பனூ இஸ்ர வேலர்களை ஏவும்படியும் கட்டளையிட்டான். யஹ்யா(அலை) அவர்கள் சற்றே தாமதிக்கவும், அவர்களிடம் ஈஸா (அலை) அவர்கள் பின்வருமாறு கூறினார்கள்: “நீங்கள் ஐந்து கட்டளை களைச் செய்யும்படியும், அவற்றைச் செயல்படுத்துமாறு பனூ இஸ்ரவேலர்களை ஏவுமாறும் கட்டளையிடப்பட்டுள் ளீர்கள். ஒன்று நீங்கள் அவற்றை அவர்களுக்கு எத்தி வைக்க வேண்டும் அல்லது நான் எத்தி வைக்க வேண்டும்.”

அதற்கு யஹ்யா (அலை), ஈஸா (அலை) அவர்களிடம், “என் சகோதரனே! நீ என்னை முந்திக் கொண்டால் நான் வேதனை செய்யப்படுவதையோ அல்லது பூமியில் புதையச் செய்யப்படுவதையோ அஞ்சுகிறேன்” என்று கூறிவிட்டு, பனூ இஸ்ரவேலர்களை பைதுல் முகத்தஸில் பள்ளி நிறையும் வரை ஒன்று திரட்டினார்கள். பிறகு ஒரு உயரமான இடத்தில் அமர்ந்து அல்லாஹ்வைப் புகழ்ந்து பாராட்டிவிட்டு பின்வரு மாறு கூறினார்கள்:

“அல்லாஹ் எனக்கு ஐந்து கடமைகளை செய்யும்படியும் அவற்றை நீங்களும் செய்யுமாறு உங்களுக்கு நான் ஏவும் படியும் கட்டளையிட்டுள்ளான். அவற்றில் முதலாவது: நீங்கள் அல்லாஹ்வையே வணங்க வேண்டும். அவனுக்கு எதையும் இணையாக்கக் கூடாது. இதற்கு உதாரணம் ஒரு மனிதனைப் போன்றாகும். அவன் தனது தூய செல்வத்திலிருந்து தங்கம் அல்லது வெள்ளியின் மூலம் ஒரு அடிமையை வாங்கினான். அந்த அடிமை வேலை செய்ய ஆரம்பித்தான். தன்னுடைய வருமானத்தை வேறொரு எஜமானுக்குக் கொடுக்க

ஆரம்பித்தான். உங்களில் யாரேனும் தன்னுடைய அடிமை இவ்வாறு இருக்க விரும்புவாரா? அல்லாஹ்தான் உங்களைப் படைத்தான், உங்களுக்கு உணவளித்தான். எனவே அவனையே வணங்குங்கள். அவனுக்கு எதையும் இணை கற்பிக்காதீர்கள்.

உங்களுக்கு நான் தொழுகையை ஏவுகிறேன். அல்லாஹ் தனது முகத்தை தன் அடியானின் முகத்திற்கு நேராக வைத்துள்ளான்- அடியான் திரும்பிப் பார்க்காத வரை. எனவே நீங்கள் தொழுதால் திரும்பிப் பார்க்காதீர்கள். நான் உங்களுக்கு நோன்பை ஏவுகிறேன். இதற்கு உதாரணம் ஒரு கூட்டத்தில் கஸ்தூரிப் பையுடன் உள்ள ஒரு மனிதனைப் போன்றாகும். கஸ்தூரியின் வாடையை அனைவரும் நுகர்கின்றனர். நோன்பாளி வாயில் ஏற்படும் ஒருவித மாற்றம் (வாடை) அல்லாஹ்விடத்தில் கஸ்தூரி வாடையை விட மணமானது.

மேலும் உங்களுக்கு ஸகாத்தை ஏவுகிறேன். இதற்கு உதாரணம் ஒரு மனிதனைப் போன்றாகும். எதிரிகள் அவனை கைது செய்து அவனுடைய கைகளை அவன் கழுத்தோடு கட்டி அவனைக் கொல்வதற்காக கொண்டு வருகிறார்கள். அப்போது அவன், ‘உங்களுக்கு நான் ஏதாவது ஈட்டுத் தொகை தந்து உங்களிடமிருந்து என்னை விடுவிக்க இயலுமா?’ எனக் கேட்டான். பிறகு அவர்களின் (இசைவின் பேரில்) கூடவோ குறையவோ ஈட்டுத் தொகையைக் கொடுத்து தன்னை விடுவித்துக் கொண்டான்.

மேலும் அல்லாஹ்வை அதிகமதிகம் நினைவுகூருவதை நான் உங்களுக்கு ஏவுகிறேன். ஒரு மனிதரை எதிரிகள் அவர் பின்னால் வேகமாக துரத்தி வருகிறார்கள். அவரோ

ஒரு பாதுகாப்பான கோட்டைக்குச் சென்று தன்னைக் காத்துக் கொண்டார். இவரது தன்மையைப் போன்றே அல்லாஹ்வை நினைவுகூருபவரின் தன்மையும் உள்ளது. ஒரு மனிதன் அல்லாஹ்வை நினைவுகூரும்போது ஷைத்தானை விட்டும் அதிகம் பாதுகாப்பாக இருப்பான்."

பின்னர் நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: "நானும் உங்களுக்கு ஐந்து காரியங்களை ஏவுகிறேன். அவற்றை அல்லாஹ் எனக்கு ஏவியுள்ளான். ஜமாஅத்தையும், (அதிகாரம் வகிப்போருக்கு) செவியேற்பதையும் கட்டுப்படுவதையும், ஹிஜ்ரத் செய்வதையும், அல்லாஹ்வின் பாதையில் அறப்போர் புரிவதையும் உங்களுக்கு ஏவுகிறேன். ஏனெனில், ஜமாஅத்தை விட்டும் ஒரு ஜாண் அளவு வெளியேறிவிடுபவன் தன் கழுத்திலிருந்து இஸ்லாமிய வளையத்தை கழற்றியவன் ஆவான்; மீண்டும் அவன் இஸ்லாத்திற்குத் திரும்பி வந்தாலே தவிர. எவன் அறியாமைக் காலத்துச் சொற்களைக் கொண்டு அழைக்கிறானோ அவன் நரகத்தின் குவியலில் ஒருவன் ஆவான். அப்போது, நாங்கள் கேட்டோம்: 'அல்லாஹ்வின் தூதரே! அவன் நோன்பு வைத்தாலும் தொழுதாலுமா?' அதற்கு நபி(ஸல்) அவர்கள், "அவன் நோன்பு வைத்தாலும் தொழுதாலும், தன்னை முஸ்லிம் என வாதிட்டாலும் சரியே! முஸ்லிம்கள், மு'.மின்கள், அல்லாஹ்வின் அடியார்கள் என்று எந்தப் பெயர்களை முஸ்லிம்களுக்கு அல்லாஹ் சூட்டியிருக்கின்றானோ அந்தப் பெயர்கனைக் கொண்டே அவர்களை அழையுங்கள்."

நூல்: அஹ்மத், திர்மிதி-2863 ஸஹீஹுல் ஜாமி'.-1724

**இந்நபி மொழியில் அடங்கியுள்ள செய்திகள் வருமாறு:**

முன்னர் சென்ற சமூகங்கள் மற்றும் நபிமார்களைப் பற்றிய செய்தி இங்கு சொல்லப்பட்டுள்ளது. படிப்பினைக்காக மக்களுக்கு சரித்திரங்களைச் சொல்வது. ஒருவன் நற்செயல்களை விரைந்து செய்ய வேண்டும்- காலதாமதம் செய்யக் கூடாது. நபிமார்கள் தம் இறைவனுக்கு அதிகம் அஞ்சியிருக்கிறார்கள். கல்விக்காக மக்களை ஒன்று திரட்டு வது. பேச்சைத் தொடங்கும்போது முதலில் அல்லாஹ்வைப் புகழ்வது. நன்மையை ஏவி தீமையைத் தடுப்பவர், தான் எதன் பக்கம் மக்களை அழைக்கின்றாரோ அதனை முதலில் அவர் செயல்படுத்த வேண்டும். காரணம் பிரச்சாரத்திற்குப் பலன் கிடைக்க வேண்டும் என்பதற்காக.

கல்வி சம்பந்தப்பட்ட விஷயங்களில் ஏகத்துவம் முதன்மை யானதாகும். மனதில் ஆளமாகப் பதிவதற்காக மக்களுக்குத் தெரிந்த, எளிதில் உணர்ந்துகொள்ளக்கூடிய விஷயங்களைக் கொண்டு உதாரணம் கூறுவது. இணைவைத்தல் மிகப் பெரும் பாவமாகும். தொழுகையில் அவசியமில்லாமல் திரும்பிப் பார்ப்பது ஹராமாகும். இவ்வாறு அதிகமாகத் திரும்பிப் பார்த்து விட்டால் தொழுகை முறிந்துவிடும். செயலைப் பொறுத்தே கூலியும் இருக்கும். ஏனெனில் நோன்பாளி தன்னைச் சிரமப்படுத்திக் கொள்கின்றபோது, அவருடைய வாயின் வாடை மாறிவிடுகின்ற பொழுது அந்த வாடை அல்லாஹ்விடத்தில் கஸ்தூரி வாடையைப் போன்று ஆகிவிடுகின்றது.

திண்ணமாக ஸகாத் மனிதனை பாவச் சிறையிருந்து விடுவிக்கின்றது. ஒரு முஸ்லிம் தன்னை ஷைத்தானிடமிருந்து பாதுகாத்துக் கொள்வதில் மிக முக்கியமானது இறைநினை

வாகும். முஸ்லிம்களுடைய ஜமாஅத்தைப் பற்றிப் படிப்பதும், அதிபருக்கு ஒரு முஸ்லிம் கட்டுப்படுவதும்- அவர் பாவமான காரியத்தை ஏவாத வரை- கடமையாகும். அறியாமைக் காலத்து கூப்பாடுகள் யாவும் ஹராமாகும். அவை இஸ்லாத்துக்கு எதிரானதும் முரணானதும் ஆகும்.

24. கர்கத் எனும் இடத்தில் நான் நபி(ஸல்)அவர்களிடம் வந்து அவர்களது ஒட்டகத்தின் கடிவாளத்தைப் பிடித்தேன். உடனே நான் (தோழர்களால்) அவர்களை விட்டும் தள்ளப் பட்டேன். அப்போது நபி(ஸல்)அவர்கள், “அவரை விடுங்கள், அவர் தேவையின் நிமித்தம் வந்திருக்கிறார்” என்றார்கள். நான்(அவர்களிடம்), ‘என்னை சொர்க்கத்தின் பக்கம் நெருக்கி வைத்து, நரகத்தை விட்டும் தூரப்படுத்தக்கூடிய செயலை எனக்கு அறிவித்துத் தாருங்கள்’ என்று கேட்டேன். அதற்கு அவர்கள், தமது தலையை வானத்தை நோக்கி உயர்த்தி விட்டு, “நீ சொன்ன வார்த்தை சுருக்கமாக இருந்தாலும் நீ கேட்ட விஷயமோ மகத்தானது. நீ அல்லாஹ்வை வணங்கு, அவனுக்கு எதையும் இணைவைத்து விடாதே, தொழுகையை நிலை நிறுத்து, ஸகாத் கொடு, இறையாலயத்தை ஹஜ் செய், ரமலானில் நோன்பு வை, உன்னிடம் மக்கள் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்று நீ விரும்புகிறாயோ அது போல அவர்களிடம் நீ நடந்து கொள், உனக்கு நீ எதை வெறுக்கிறாயோ அதை மக்களுக்கும் தடுத்துவிடு” என்று கூறிவிட்டு, “கடிவாளத்தை விடுவீராக” எனக் கூறினார்கள். இதனை முகீரா பின் ஸஅத் (ரலி), தமது தந்தை அல்லது சிறிய தந்தையிடமிருந்து அறிவித்துள்ளார். ஸவாயிதுல் முஸ்னதில் அப்துல்லாஹ் பின் அஹ்மத் அவர்கள் இதைப் பதிவு செய்துள்ளார்கள். பார்க்க: ஸில்ஸில...ஸஹீஹா-1477

**இந்நபிமொழியிலுள்ள செய்திகள்:**

நற்செயல்கள் ஈமானைச் சார்ந்ததாகும். நற்செயல்களில் ஏகத்துவத்திற்குப் பிறகு மிக முக்கியமானது தொழுகை ஆகும். கடமையில்லாத காரியங்கள் நபிலானவைகளாகும். கட்டாயமானவைகள் அல்ல. நற்பண்பு ஈமானைச் சேர்ந்தது. மக்களுடன் நல்ல முறையில் நடந்து கொள்வது மிகச் சிறந்த செயலாகும். அறிவுரை கூறும்போது சுருக்கமாகக் கூறவேண்டும். முக்கியமான விஷயங்களுக்கு முக்கியத்துவம் தர வேண்டும். மார்க்கம் என்பது நம்பிக்கைகள், சொல், செயல்கள் அடங்கியது.

## ஏகத்துவத்தின் சிறப்பு

25. "வணக்கத்திற்குரிய இறைவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை; அவன் தனித்தவன்; அவனுக்கு யாதொரு இணையுமில்லை என்றும் முஹம்மத் அல்லாஹ்வின் அடியாரும் அவன் தூதரும் ஆவார் என்றும் ஈஸா அல்லாஹ் வின் அடியாரும் அவனுடைய தூதரும், மர்யமுக்கு அவன் இட்ட கட்டளையும், அவனுடைய உயிரும் ஆவார் என்றும், சொர்க்கம் உண்மையானது, நரகமும் மெய்யானதே என்றும் யார் உறுதியாக நம்புகிறாரோ அவரை அல்லாஹ் அவர் செய்த செயல்களுக்கேற்ப சொர்க்கத்தில் நுழைவிப்பான்" என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். (புகாரி-3435 , அஹ்மத்)

அறிவிப்பவர்: உபாதா பின் ஸாபமித் (ரலி),

**இந்த நபிமொழியில் கூறப்பட்டிருக்கும் செய்திகள்:**

தூய ஏகத்துவத்திற்கு அவசியமான சில விஷயங்கள் கூறப்பட்டுள்ளன. உதாரணமாக ஈஸா (அலை) அல்லாஹ்வின் அடியாரும் அவன் தூதருமாவார் என நம்புவது. ஏனெனில்

திரித்துவக் கொள்கையுடையோர் இம்மாபெரும் விஷயத்தில் அல்லாஹ்வை மறுக்கின்றனர். தூய ஏகத்துவத்திற்கு அவசிய மானவைகளில் இதனை நம்புவதும் ஒன்றாகும். அதாவது ஈஸா (அலை) அவர்களை அல்லாஹ் தனது கட்டளையால் படைத்தான், அக்கட்டளையை மர்யமிடம் போட்டான், மேலும் ஈஸா (அலை) அல்லாஹ்வின் (புறத்திலிருந்து வந்த) உயிரும் ஆவார் என்று நம்புவது. இதை ஒரு அடியான் நம்பினால் சிலுவைக்காரர்களை விட்டு விலகி சந்தேகமில்லாத உண்மையை ஒத்துக் கொண்டவர் ஆவார்.

ஏகத்துவத்திற்கு அவசியமானவைகளில் சொர்க்கம், நரகம் மற்றும் (மறுமையில்) மீண்டும் எழுப்பப்படுதல் ஆகியவற்றை நம்பவதும் ஒன்றாகும். மேற்கூறப்பட்டவைகளை யார் செய்கின்றாரோ அவர் சொர்க்கம் செல்வார்; அவர் பாவம் செய்திருந்தாலும் சரி. (பாவத்திற்குத் தண்டனை பெற்ற பிறகு சொர்க்கத்திற்கு வந்து விடுவார்.) அவனது ஒதுங்குமிடம் இன்பம் நிறைந்த சொர்க்கச் சோலைகளில் நிரந்தரமாக இருக்கும். சொர்க்கத்திற்கு எட்டு வாசல்கள் இருக்கின்றன. அது சம்பந்தமாக பின்னர் வரும்.

26. “அல்லாஹ்வுக்கு எதையும் இணைகற்பிக்காமல் யார் அல்லாஹ்வைச் சந்திக்கிறாரோ அவர் சொர்க்கம் செல்வார்” என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர்: அனஸ் (ரலி), நூல்: புகாரி-129,முஸ்லிம்-93

**இந்நபிமொழியில் அடங்கியுள்ள கருத்துக்கள்:**

இம்மகத்தான வாசகத்தின் கருத்துக்கள் முன்னர் கூறப்பட்டுள்ளன. இங்கு நான் கூறுவது என்னவென்றால் ஒரு அடியான் தனது கொள்கையை சரியாக ஆக்கிக்கொள் வதற்கும், ஷிர்க்கின் சாயலை விட்டும் அத்வைதத்தின்

அழுக்கை விட்டும் தூய்மைப்படுத்துவதற்கும் முழு அக்கறை எடுத்துக் கொள்வது அவசியமாகும். காரணம் மறுமையில் தூய உள்ளத்துடனும், சரியான மார்க்கத்துடனும் அவரது இறைவனை அவர் சந்திக்க வேண்டும் என்பதற்காக. ஏனெனில் இணைவைக்கக்கூடிய ஒவ்வொருவருக்கும் அல்லாஹ் சொர்க்கத்தைத் தடை செய்திருக்கிறான்.

## ஏகத்துவவாதிகளில் பாவிளுக்கு நிரந்தர நரகம் கிடையாது

27. நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள்: "சொர்க்கவாசிகள் சொர்க்கத்திலும் நரகவாசிகள் நரகத்திலும் நுழைந்து விடுவார்கள். அதன் பிறகு எவருடைய உள்ளத்தில் கடுகு அளவு ஈமான் உள்ளதோ அவரை (நரகத்திலிருந்து) வெளியேற்றுங்கள் என்று அல்லாஹ் கூறுவான். அவர்கள் அதிலிருந்து வெளியேற்றப்படுவார்கள். அவர்கள் கருகிப் போய் இருப்பார்கள் பிறகு "ஹயாத்" எனும் ஜீவநதியில் போடப்படுவார்கள். அதனால் அவர்கள் வெள்ளம் பாயும் ஓடைக் கரையில் விதைகள் தளிர்ப்பதுபோல பொலிவடை வார்கள். அவை வளைந்து மஞ்சள் நிறமாக இருப்பதை நீர் பார்த்ததில்லையா?"

அறிவிப்பவர்: அபூஸயீத் (ரலி), நூல்: புகாரி-22

**இந்நபிமொழியில் அடங்கியுள்ள கருத்துக்கள் வருமாறு:**

மனிதர்களிடையே ஈமானில் ஏற்றத் தாழ்வு காணப்படும். ஈமான் கொண்டவர்களில் பாவம் செய்தவர்கள் நரகத்தில் நிரந்தரமாக இருக்க மாட்டார்கள். ஒரு முஸ்லிம், தான் செய்த பாவங்களின் காரணமாக நரகம் செல்வான். நற்செயல்கள் ஈமானைச் சேர்ந்ததாகும். ஈமான் அதிகரிக்கவும் செய்யும்

குறையவும் செய்யும். ஒரு அடியான் எந்த நன்மையையும் அற்பமாகக் கருதக் கூடாது. எளிதில் உணர்ந்து கொள்ளக் கூடிய விஷயங்கள் மூலம் கருத்துக்களை தெளிவுபடுத்துவது.

மறுமையில் செயல்கள் நிறுக்கப்படும். மக்களுக்குத் தெரிந்த விஷயங்களைக் கொண்டு உவமானம் கூறுவது. நரகில் கடுமையான வேதனை உண்டு. (அதனை விட்டும் அல்லாஹ் நம்மை காப்பாற்றுவானாக!) சிறிதளவு நற்செயல் காரணமாக சிலரை அல்லாஹ் நரகத்திலிருந்து வெளி யேற்றினான் எனும் வகையில் தன் அடியார்கள் மீதுள்ள அல்லாஹ்வினுடைய விசாலமான கருணை இங்கு சுட்டிக் காட்டப்பட்டுள்ளது.

28. “எவர் தமது உள்ளத்தில் ஒரு வார்க்கோதுமை அளவு நன்மையிருக்கும் நிலையில் வணக்கத்திற்குரிய இறைவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை எனக் கூறினாரோ அவர் நரகிலிருந்து வெளியேறிவிடுவார். மேலும் எவர் தமது இதயத்தில் ஒரு மணிக்கோதுமை அளவு நன்மை யிருக்கும் நிலையில் வணக்கத்திற்குரியன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை எனக் கூறினாரோ அவரும் நரகத்திலிருந்து வெளியேறிவிடுவார். மேலும் எவர் தமது உள்ளத்தில் ஒரு அணு அளவு நன்மையிருக்கும் நிலையில் வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாரும் இல்லை எனக் கூறினாரோ அவரும் நரகிலிருந்து வெளியேறி விடுவார்” என நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர்: அனஸ் (ரலி), நூல்: புகாரி-44 , முஸ்லிம்-193

**இந்த நபிமொழியில் கூறப்பட்டிருக்கும் கருத்துக்கள்:**

பாவம் செய்த ஏகத்துவவாதிகள் நரகத்திலிருந்து வெளி யேறிவிடுவார்கள். பெரும்பாவம் செய்தவர் நரகில் வேதனை செய்யப்படுவார். ஆனால் முர்ஜியாக்களின் கருத்து இதற்கு மாறானது. பெரும்பாவம் செய்தவர் நரகிலிரந்து வெளியேறி விடுவார். ஆனால் காரிஜியாக்களின் கருத்து இதற்கு மாற்ற மானதாகும். ஈமான் என்பது நம்பிக்கையும் சொல்லும் அடங்கி யதாகும். எவ்வாறெனில் லாஇலாஹ இல்லல்லாஹ் என்று சொல்வது, ஒரு வார்கோதுமை அளவு நன்மை செய்வது ஆகிய இரண்டையும் நபி(ஸல்)அவர்கள் சேர்த்துக் கூறியிருக் கிறார்கள். மக்கள் புரிந்துகொள்வதற்காக எளிதில் உணர்ந்து கொள்ளக்கூடிய விஷயங்கள் மூலம் கருத்துக்களைச் சொல்வது. அல்லாஹ்வினுடைய விசாலமான கருணை இங்கு சுட்டிக்காட்டப்பட்டுள்ளது. அல்லாஹ் ஒரு அடியானுக்கு அவனுடைய எந்த நன்மையையும் வீணாக்கி விடமாட்டான். ஈமான் அதிகரிக்கவும் செய்யும் குறையவும் செய்யும்.

## இணைவைத்தல் பற்றிய எச்சரிக்கை

அல்லாஹ் கூறுகிறான்: திண்ணமாக அல்லாஹ் தனக்கு இணைவைக்கப்படுவதை மன்னிக்க மாட்டான். அதற்குக் கீழ் நிலையில் உள்ள (பாவத்) தை தான் நாடியோருக்கு மன்னிப்பான். அல்லாஹ்வுக்கு இணை கற்பிப்பவர் மிகப் பெரிய பாவத்தை கற்பனை செய்தவராவார். (4:48)

“நீர் இணை கற்பித்தால் உமது நல்லறம் அழிந்து விடும்; நீர் நஷ்டமடைந்தவராவீர்” என (நபியே!) உமக்கும் உமக்கு முன் சென்றோருக்கும் வஹி அறிவிக்கப்பட்டுள்ளது. (39:65)

எவன் அல்லாஹ்வுக்கு இணை கற்பிக்கின்றானோ அவனுக்குத் திண்ணமாக அல்லாஹ் சுவர்க்கத்தைத் தடை

செய்திருக்கின்றான். அவன் ஒதுங்குமிடம் நரகமாகும். அநீதி இழைத்தோருக்கு உதவி செய்வோர் யாருமில்லை. (5:72)

அல்லாஹ்வுக்கு இணை கற்பிப்பவன் வானத்திலிருந்து விழுந்து பறவைகள் தூக்கிச் சென்றவனைப்போல், அல்லது காற்று தூரமான இடத்தில் கொண்டு போய்ப் போட்டவனைப் போல் ஆவான். (22:31)

29. "அழிவைத் தரக்கூடிய ஏழு பாவங்களைத் தவிர்ந்து கொள்ளுங்கள்" என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதும், 'அல்லாஹ்வின் தூதரே! அவை யாவை?' எனக் கேட்கப்பட்டது. அதற்கவர்கள், "அல்லாஹ்வுக்கு இணை வைப்பது, சூனியம் செய்வது, அல்லாஹ் புனிதப்படுத்திய எந்த உயிரைம் நியாயமின்றிக் கொல்வது, அநாதையின் சொத்தை உண்பது, வட்டி உண்பது, போர்க் களத்தில் புறமுதுகு காட்டுவது, மு.்.மினான கற்புள்ள அப்பாவிப் பெண்களை அவதூறு சொல்வது" என பதிலளித்தார்கள்.

அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரலி), (புகாரி-2767, முஸ்லிம்-89)

### இந்நபி மொழியில் அடங்கியுள்ள செய்திகள் வருமாறு:

பாவங்களுக்கிடையில் ஏற்றத்தாழ்வுகள் உள்ளன என விளக்கப்பட்டுள்ளது. அவற்றில் சில, அவற்றை செய்பவனுக்கு நாசத்தைத் தரக்கூடியவையாக உள்ளன. இணைவைத்தல் மிகப் பெரும் பாவமாகும். ஏனெனில் அது அல்லாஹ்வின் இறைத்தன்மையில் களங்கத்தை ஏற்படுத்தக்கூடியதாகவும், அவனுடைய மார்க்கத்தில் குறை காண்பதாகவும், அவனை நிராகரிப்பதாகவும் இருக்கிறது. சூனியம் செய்வது பெரும் பாவமாக இருப்பதற்குக் காரணம் மறைவான உண்மைகள்

தனக்குத் தெரிவதாக வாதிடுதல், மக்களுக்குத் தீங்கு இழைத்தல் எனும் அம்சம் அதில் இருப்பதனாலாகும்.

அடுத்து அப்பாவியான ஒரு முஸ்லிமின் உயிரைக் கொல்வதும் பெரும்பாவமாகும். ஏனெனில் இதில் இரத்தத்தை ஓட்டுதல், உயிரை அழித்தல், இவ்வுலகில் வாழ்வதற்கான அடிப்படைத் தன்மையை இழக்கச் செய்தல் ஆகிய அம்சங்கள் இருக்கின்றன. ஆயினும் நியாயத்தின் அடிப்படையில் அமைந்த கொலை இதிலிருந்து விதிவிலக் கானது. உதாரணமாக ஷரீஅத் அடிப்படையில் பழிக்குப்பழி தீர்ப்பது, அல்லது அதுபோன்ற வேறு ஏதாவது தண்டனை நிறைவேற்றுவது. ஏனெனில் ஷரீஅத்து தான் இதனைச் சொல்லியிருக்கிறது. மட்டுமல்ல அல்லாஹ்விடமிருந்து வந்த கடமையாகும் இது!

அடுத்து அநாதையின் பொருளை உண்பதும் பெரும் பாவமாகும். அந்த அநாதையால் தனது பொருளைப் பாதுகாக்க இயலாது. அதற்கடுத்து வட்டி உண்பதும் பெரும் பாவமாகும். இது அல்லாஹ்வுடன் போர் புரிவதாகவும், செல்வத்தில் அவனது வரம்பை மீறுவதாகவும் அமைகிறது. அடுத்து எதிரியை நேருக்கு நேர் சந்திப்பதை விடுத்து புறங்காட்டி ஓடுவது. இதில் இம்மார்க்கத்துக்கும் இம்மார்க் கத்தைப் பின்பற்றுவோருக்கும் இழிவு இருக்கிறது. மட்டுமல்ல நிராகரிப்பாளர்களுக்குப் பலமும் நம்பிக்கையாளர்களுக்கு பலவீனமும் இருக்கிறது என்பதால் இதுவும் பெரும் பாவம் ஆகும். அதற்கடுத்து கற்பு நெறியுடைய- தங்கள் வெட்கத் தலங்களைப் பாதுகாக்கக்கூடிய இறைநம்பிக்கை கொண்ட பெண்களை அவதூறு கூறுவதும் பெரும் பாவமாகும். இத்தகைய பெண்கள் மானக்கேடான காரியங்களின் பால்

இட்டுச் செல்லக்கூடிய காரண காரியங்களையும் வழிமுறை களையும் அறியாதவர்கள், அவை அனைத்தையும் விட்டும் விலகி இருப்பவர்கள்.

ஏழு பாவங்கள் மட்டும் இங்கு கூறப்பட்டிருப்பதன் காரணம் அவை அடிப்படையான பாவங்களாகவும் மிகப் பெரும் தீமைகளாகவும் இருப்பதனால் தான். இத்தகைய பாவங்கள் ஏழுக்கும் கூடுதலாக இருப்பதாக சில அறிஞர்கள் கூறியுள்ளனர்.

30. “நான் இணைவைப்போரின் இணைவைப்பபை விட்டும் தேவையற்றவன். என்னுடன் என் அல்லாதவரை இணையாக்கி ஒரு செயலை எவன் செய்கிறானோ அவனையும் அவனது இணைவைப்பையும் விட்டுவிடுவேன்” என அல்லாஹ் கூறு வதாக அல்லாஹ்வின் தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரலி), நூல்: முஸ்லிம்-2985

**இந்நபிமொழியிலிருந்து பெறப்படும் செய்திகள் வருமாறு:**

இணைவைப்போரின் செயல்கள் எதுவும் ஏற்கப்பட மாட்டாது. வணக்க வழிபாட்டுக்கு தூய எண்ணம் அவசியம். முகஸ்துதி ஷிர்க்காகும். பிறர் பார்க்க வேண்டும் மெச்ச வேண்டும் என்பதற்காக ஒன்றைச் செய்பவனுக்கு அவனது செயல் அவனிடமே திருப்பப்படும் (ஏற்கப்பட மாட்டாது). முகஸ்துதிக்காகச் செய்பவனுடைய செயல் இரண்டாகப் பிரிக்கப்பட்டு சிலது ஏற்கப்பட்டு சிலது நிராகரிக்கப்படும் என்பதல்ல. மாறாக அவனுடைய செயல்கள் அனைத்தும் நிராகரிக்கப்படும். அடியான் ஒரு செயலைச் செய்வதன் மூலம் தன் இறைவனையே நாட வேண்டும். இணை கற்பித்தலை விட்டும் தனது எண்ணத்தைத் தூய்மைப்படுத்த வேண்டும்.

31. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: “அனைத்துப் பாவங்களையும் அல்லாஹ் மன்னிப்பான். ஆனால் இணைவைத்த நிலையில் மரணித்தவனைத் தவிர. அல்லது ஒரு மு∴மினை வேண்டுமென்றே கொலை செய்த இன்னொரு மு∴மினைத் தவிர.”

அறிவிப்பவர்: அபுத்தர்தா (ரலி),
நூல்: அபூதாவூத்-4270 (ஸில்ஸில…ஸஹீஹா-5110)

**இந்நபிமொழியில் உள்ள கருத்துக்கள் வருமாறு:**

திண்ணமாக இணைவைத்தவனை அல்லாஹ் மன்னிக்க மாட்டான்; அவனது செயல் ஒப்புக் கொள்ளப்பட மாட்டாது; நற்செயல்கள் அவனுக்குப் பலன் தராது. ஒரு அடியான் பெரும் பாவங்களை விட்டும் தவ்பா செய்யவில்லையெனில் அவை அல்லாஹ்வின் நாட்டத்தின் கீழ் இருக்கும்; அவன் நாடினால் அவனை மன்னிப்பான். அவன் நாடினால் அவனைத் தண்டிப்பான். ஒரு மு∴மினான உயிரை வேண்டுமென்றே கொலை செய்வது நிரந்தர நரகத்தை முன்னறிவிப்புச் செய்கிறது. வேண்டுமென்றே கொலை செய்வது ஆகுமானதே என்று எண்ணி கொலை செய்தவனுக்குத் தான் நிரந்தர நரகம் என சிலர் கருதுகின்றனர்.

32. அபுத்தர்தா (ரலி) அறிவிப்பதாவது: “நீ அல்லாஹ்வுக்கு எதையும் இணை கற்பிக்காதே! நீ கண்டம் துண்டமாக வெட்டப்பட்டாலும் நெருப்பிலிட்டு பொசுக்கப்பட்டாலும் சரியே! கடமையான தொழுகையை வேண்டுமென்றே விட்டுவிடாதே! அதை வேண்டுமென்றே விட்டவனை விட்டும் அல்லாஹ்வின் பொறுப்பு நீங்கி விடுகின்றது. மது அருந்தாதே! ஏனெனில்

அது அனைத்து தீமைகளின் திறவு கோலாகும்” என என் நண்பர் (நபி (ஸல்) அவர்கள்) எனக்கு அறிவுரை கூறினார்.

நூல்: இப்னு மாஜா-4034 (அல் இர்வா.∴-2026)

## இந்நபிமொழியிலிருந்து பெறப்படும் செய்திகள்:

ஒருவன் எந்த நிலையிலும் ஏகத்துவக் கொள்கையை விட்டுவிடக் கூடாது. அவனுடைய உள்ளம் (எப்போதும்) ஈமானில் நிம்மதியுடன் இருக்க வேண்டும். நிராகரிப்பை மன நிறைவோடு ஏற்றுக் கொள்வதும் கூடாது. ஆனால் நாவைப் பொறுத்த வரையில் வேதனையைப் பொறுத்துக் கொள்ள முடியவில்லையெனில் அந்த வேதனையிலிருந்து தப்பித்துக் கொள்ளும் அளவுக்கு நிராகரிப்புச் சொல்லை மொழிவது கூடும். தொழுகையை விட்டவன் இறைநிராகரிப்பாளர்களுக்கு ஒப்பானவனும், இறைமார்க்கத்தை தன் முதுகுக்குப் பின்னால் வீசி எறிந்தவனுமாவான். மது, இவ்வுலகில் அனைத்துத் தீமைகளுக்கும் அடிப்படையாகும். ஏனெனில் மது அருந்தியவனின் அறிவு நீங்கி விடுகிறது. பிறகு எல்லா தீமைகளையும் பாவங்களையும் செய்து விடுகின்றான்.

## ஈமானின் சிறப்பு

33. உமர் (ரலி) அறிவிப்பதாவது: கைபர் போர் நடந்த நாளன்று நபித்தோழர்களில் சிலர், ‘இன்னார் வீர மரணம் அடைந்துவிட்டார், இன்னார் வீர மரணம் அடைந்து விட்டார்’ என்று சொல்லிக் கொண்டே வந்தனர். இறுதியில் அவர்கள் ஒரு மனிதரைக் கடந்து வந்ததும் ‘இவரும் வீர மரணம் அடைந்து விட்டார்’ என்றனர். உடனே நபி (ஸல்) அவர்கள், “அவ்வாறல்ல! ஒரு ஆடை விஷயத்தில் அவர் மோசடி செய்ததின் காரணமாக நான் அவரை, நரகில் கண்டேன்”

எனக் கூறினார்கள். பிறகு “கத்தாபின் மகனே! நீர் சென்று, மு.்.மின்களைத் தவிர வேறு யாரும் சொர்க்கம் செல்ல மாட்டார்கள் என்று மக்களுக்கு அறிவிப்புச் செய்யும்” என்று கூறினார்கள். நான் சென்று ‘அறிந்து கொள்ளுங்கள்! மு.்.மின்களைத் தவிர வேறு யாரும் சொர்க்கம் செல்ல மாட்டார்கள்’ என்று அறிவித்தேன். (முஸ்லிம்-114, அஹ்மத்)

**இந்நபிமொழி கூறும் கருத்துக்கள் வருமாறு:**

இந்த மகத்தான அறிவிப்பைச் செய்ததன் மூலம் உமர் (ரலி) அவர்களுடைய சிறப்பு அறியப்படுகிறது. மக்களுக்கு நன்மை பயக்கும் என்றிருந்தால் பயனுள்ள கல்வியை பகிரங்கமாக அறிவிப்புச் செய்ய வேண்டும். இது பொறுப்பில் இருந்து நீங்கிக் கொள்வதற்காகவும் (மக்கள் குறை கூற வழியில்லாத வகையில்) ஆதாரத்தை நிலை நாட்டுவதற் காகவும், மக்களை விட்டும் அறியாமையை அகற்றுவதற் காகவும் ஆகும். முதன் முதலில் அடிப்படைக் கல்வியையும், முக்கியமான விஷயங்களையும் எடுத்துச் சொல்வது மார்க்க அறிஞருக்கு அவசியாகும்.

34. ‘சிறந்த செயல் எது?’ என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் கேட்கப்பட்டது. அதற்கவர்கள், “அல்லாஹ்வை யும் அவன் தூதரையும் நம்புது” என பதிலளித்தார்கள். ‘பிறகு எது?’ என்று வினவப்பட்டது. “அல்லாஹ்வின் பாதையில் அறப்போர் புரிவது” என்றார்கள். ‘பிறகு எது?’ என்று கேட்கப் பட்டதற்கு, “ஏற்றுக் கொள்ளப்பட்ட ஹஜ்” என்றார்கள்.

அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரலி), நூல்: புகாரி-26

**இந்நபி மொழியிலிருந்து பெறப்படும் செய்திகள்:**

ஈமானின் வகைக்களுக்கிடையே ஏற்றத் தாழ்வு உண்டு. நம்பிக்கையாளர்களிடையே செயல்களில் ஏற்றத்தாழ்வுகள்

உள்ளன. இதில் முர்ஜிஆக்களுக்கு மறுப்பு இருக்கிறது- அவர்கள் நற்செயலை ஈமானிலிருந்து பிரித்துவிட்டனர் எனும் வகையில். இந்நபிமொழியில் கேள்வி கேட்டவர்கள் வேறுபட்டிருப்பதால் பதில்களும் வேறுபட்டுள்ளன. அல்லாஹ்வையும் அவன் தூதரையும் நம்பிக்கை கொண்ட பிறகே எந்தச் செயலும் ஏற்றுக் கொள்ளப்படும். அல்லாஹ்வின் பாதையில் அறப்போர் புரிவது மகத்தான காரியமென இங்கு சுட்டிக் காட்டப்பட்டுள்ளது. அல்லாஹ்வை நெருங்கும் வழிகளில் அது மிகச் சிறந்ததாகும். நற்செயல்களில் சிறந்தது ஹஜ் மப்ரூர் - அதாவது பாவம் கலக்காத ஹஜ் ஆகும். மார்க்க அறிஞரிடம் கல்வியை அதிகம் தேட வேண்டும். ஆயினும் அவர் மீது சடைவை ஏற்படுத்திவிடக் கூடாது.

## ஈமானின் பண்புகளும் அடையாளங்களும்

அல்லாஹ் கூறுகிறான்: “உங்கள் முகங்களை கிழக்கு நோக்கியோ மேற்கு நோக்கியோ திருப்புவது நன்மையன்று. மாறாக அல்லாஹ்வையும், இறுதி நாளையும், வானவர்களையும், வேதத்தையும் நபிமார்களையும் நம்புவோரும், உறவினர்கள், அனாதைகள், ஏழைகள்,வழிப்போக்கர்கள், யாசிப்போர் மற்றும் அடிமைகளை விடுதலை செய்வதற்கும் (மன) விருப்பத்துடன் செல்வத்தை வழங்குவோரும், தொழுகையை நிலை நாட்டுவோரும், ஸகாத்தை வழங்குவோரும், வாக்களித்தால் தமது வாக்கை நிறைவேற்றுவோரும்,வறுமை, நோய் மற்றும் போர்க்களத்தில் சகித்துக் கொள்வோருமே நன்மை செய்பவர்கள். அவர்களே உண்மை கூறியவர்கள், அவர்களே (இறைவனை) அஞ்சுபவர்கள்.” (2:177)

“நம்பிக்கை கொண்டோர் வெற்றி பெற்று விட்டனர். அவர்கள் தமது தொழுகையில் பணிவைப் பேணுவார்கள்,

வீணானதைப் புறக்கணிப்பார்கள், ஸகாத்தையும் நிறை வேற்றுவார்கள், தமது மனைவியர் அல்லது தமது அடிமைப் பெண்களிடம் தவிர தமது கற்பைக் காத்துக் கொள்வார்கள், அவர்கள் பழிக்கப்பட்டோர் அல்லர். இதற்கு அப்பால் (வேறு வழியை) தேடியவர்களே வரம்பு மீறியவர்கள். மேலும் அவர்கள் தமது அமானிதங்களையும், தமது வாக்குறுதி யையும் பேணுவார்கள், மேலும் அவர்கள் தமது தொழுகை களையும் பேணுவார்கள், அவர்கள் தான் ஃபிர்தவ்ஸ் எனும் சொர்க்கத்தைப் பெறும் வாரிசுகளாவர். அதில் அவர்கள் நிரந்தரமாக இருப்பார்கள்." (23:1-11)

35. "ஈமான் என்பது அறுபதுக்கும் மேற்பட்ட அல்லது எழுபதுக்கும் மேற்பட்ட கிளைகளைக் கொண்டதாகும். அவற்றில் மிகச் சிறந்தது லாஇலாஹ இல்லல்லாஹ்- வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாரு மில்லை- என்று கூறுவதாகும். அவற்றில் மிகத் தாழ்ந்தது தொல்லை தரும் பொருட்களை பாதையிலிருந்து அகற்று வதாகும். வெட்கம் ஈமானின் கிளையாகும்" என அல்லாஹ் வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர்: அபூஹுரைரா(ரலி), நூல்: முஸ்லிம்-35

**இந்நபிமொழியில் அடங்கியுள்ள விஷயங்கள் வருமாறு:**

ஈமானுக்கு கிளைகளும் வகைகளும் உள்ளன எனத் தெளிவுபடுத்தப்பட்டுள்ளது. ஈமானில் ஏற்றத் தாழ்வுகளும் இருக்கின்றன. ஈமானில் மிக முக்கயமானதும், மிகச்சிறந்ததும், மிக உயர்ந்ததும் லாஇலாஹ இல்லல்லாஹ் ஆகும். நற்செயல் ஈமானைச் சேர்ந்தது. அதுபோல நற்பண்புகளும் ஈமானைச் சார்ந்ததே. ஈமான் ஏற்றத் தாழ்வுகளைக் கொண்ட தாகவும் பல வகைகளைக் கொண்டதாகவும் இருப்பதால்

அது அதிகரிக்கவும், குறையவும் செய்யும். ஒரு அடியான் தொல்லை தரும் பொருட்களை பாதையை விட்டும் அகற்றுவது உட்பட எந்த நல்லறத்தையும் அற்பமாக கருதக் கூடாது. ஏகத்துவத்தைக் கொண்டல்லாமல் எந்த நற்செயலும் பரிபூரணமாகாது.

36. “அல்லாஹ்வை இறைவனாகவும் இஸ்லாத்தை வாழ்க்கை நெறியாகவும், முஹம்மதை இறைத்தூதராகவும் பொருந்திக் கொண்டவர் ஈமானின் சுவையை சுவைத்து விட்டார்” என நபி(ஸல்) அவர்கள் கூறியதாக இப்னு அப்பாஸ் (ரலி) அறிவிக்கிறார்கள். நூல்: முஸ்லிம்-34, திர்மிதி-2623

**இந்நபி மொழியிலிருந்து பெறப்படும் விஷயங்கள்:**

எளிதில் உணர்ந்து கொள்ளக்கூடிய விஷயங்கள் மூலம் கருத்துக்களை எடுத்துச் சொல்வது. மூன்று அடிப்படை விஷயங்கள்தான் இம்மார்க்கத்தின் அஸ்திவாரமாகும். அவை அல்லாஹ்வை இறைவனாக, இஸ்லாத்தை மார்க்கமாக, முஹம்மதை இறைத்தூதராக திருப்தியுடன் ஏற்றுக் கொள்வ தாகும். இம் மூன்று அடிப்படை விஷயங்களில் மு.்.மின்களுக் கிடையில் மிகப் பெரும் ஏற்ற தாழ்வுகள் இருக்கின்றன. பொருந்திக் கொள்ளுதல் என்ற உள்ளம் சார்ந்த செயல் ஈமானின் ஓர் அம்சமாகும். மனிதன் எந்த அளவு ஏகத்துவத்தை மெய்ப்படுத்தி ஈமானை பரிசுத்தப்படுத்துகிறானோ அந்த அளவுக்கு அவன் ஈமானின் சுவையை உணர்ந்து கொள்ள முடியும்.

37. “எவரிடம் மூன்று தன்மைகள் அமைந்து விட்டனவோ அவர் ஈமானின் சுவையை உணர்ந்தவராவார். (அவை) அல்லாஹ்வும் அவனது தூதரும் மற்ற எல்லாவற்றையும்

விட ஒருவருக்கு மிகப் பிரியமானவர்களாக ஆவது. ஒருவர் இன்னொருவரை அல்லாஹ்வுக்காகவே நேசிப்பது. நெருப்பில் வீசப்படுவதை வெறுப்பது போல நிராகரிப்புக்குத் திரும்பச் செல்வதை வெறுப்பது" என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர்: அனஸ் (ரலி), நூல்: புகாரி-16, முஸ்லிம்-43

**இந்நபி மொழியில் அடங்கியுள்ள செய்திகள்:**

ஈமானுக்கு சுவை இருப்பதாக நிரூபணமாகின்றது. ஈமானை முழுமைப்படுத்துகிறவன் இதனை உணர்ந்து கொள்வான். அல்லாஹ்வையும் அவனது தூதரையும் நேசிப்பதும், மற்ற எல்லாவற்றையும் நேசிப்பதை விடவும் அவ்விருவரை நேசிப்பதற்கு முன்னுரிமை தருவதும் கடமையாகும். அல்லாஹ்வின் தூதரை நேசிப்பது அல்லாஹ்வை நேசிப்பதில் அடங்கும். அல்லாஹ்வுக்காக நேசிப்பது ஈமானின் ஓர் அசம். கா.ஃ.பிரை வெறுப்பதும் ஈமானின் ஓர் அம்சமாகும் என்றும் இதிலிருந்து விளங்கலாம். நிராகரிப்பையும் நிராகரிப்பாளர் களின் செயல்களையும் வெறுப்பது கடமையாகும். இறை மார்க்கத்தை விட்டு வெளியேறுவதை-வந்த வழியே திரும்பிச் செல்வதை வெறுக்க வேண்டும். அல்லாஹ் மற்றும் அவன் தூதர் அல்லாதவர்களை (அவர்களை நேசிப்பது போன்று) நேசிப்பது ஹராமாகும். அல்லாஹ் கூறுகிறான்:

"(நபியே!) நீர் கூறுவீராக! உங்கள் தந்தையர், உங்கள் பிள்ளைகள், உங்கள் சகோதரர்கள், உங்கள் மனைவியர், உங்கள் உறவினர்கள், நீங்கள் சம்பாதித்த செல்வங்கள், நஷ்டம் ஏற்பட்டுவடுமோ என நீங்கள் அஞ்சுகின்ற உங்கள் வாணிபம் மற்றும் உங்களுக்கு விருப்பமான இல்லங்கள் ஆகியவை அல்லாஹ்வை விட, அவன் தூதரை விட, அவன்

வழியில் போரிடுவதை விட உங்களுக்கு நேசமானவையாக ஆகிவிட்டால் அல்லாஹ் தனது கட்டளையைப் பிறப்பிக்கும் வரை காத்திருங்கள். குற்றம் புரியும் கூட்டத்திற்கு அல்லாஹ் நேர்வழி காட்ட மாட்டான்." (9:24)

38. நபி (ஸல்) அவர்களிடம் ஈமான் பற்றி வினவப்பட்டது. அதற்கவர்கள், "பொறுத்தலும் தாராளமாக நடந்து கொள்ளலுமாகும்" என விடையளித்தார்கள்.

அறிவிப்பவர்: ஜாபிர் (ரலி),
நூல்: முஸ்னது அபீய.ஃலா, (ஸில்ஸில....ஸஹீஹா-554)

**இந்நபிமொழியில் உள்ள கருத்துக்கள்:**

இங்கு ஈமானுக்கு அதன் முக்கியக் காரியங்கள் மற்றும் சிறந்த தன்மைகளைக் கொண்டு விளக்கம் கூறப்பட்டுள்ளது. அதுதான் பொறுத்துக் கொள்வதும் தாராளமாக நடந்து கொள்வதும் ஆகும். ஏனெனில் பொறுமை ஈமானின் தலையாயது. காரணம் அதன் மூலம் தான் ஏவப்பட்ட காரியங்களை எடுத்து நடக்கிறோம், விலக்கப்பட்ட காரியங்களிலிருந்து விலகிக் கொள்கிறோம், விதியையும் சகித்துக் கொள்கிறோம். அடுத்து தாராளமாக நடந்து கொள்ளுதல்: இதில் அல்லாஹ்விடம் கிடைக்கக்கூடிய கூலியை உறுதியாக நம்புதல், அவனது மகத்தான வாக்குறுதியைக் குறித்து மன திருப்தி அடைதல் எனும் அம்சம் இருக்கிறது. ஈமான் என்பது நம்பிக்கைகள், நற்செயல்கள், நற்பண்புகள் ஆகியவற்றை உள்ளடக்கியதாகும்.

39. அபூஉமாமா (ரலி) அறிவிக்கிறார்கள்: ஒரு மனிதர், 'அல்லாஹ்வின் தூதரே! ஈமான் என்றால் என்ன?' என்று கேட்டார். அதற்கு நபி (ஸல்) அவர்கள், "நீ செய்த நன்மை உனக்கு மகிழ்ச்சியையும், நீ செய்த தீமை உனக்கு

வருத்தத்தையும் தந்தால் நீ தான் மு∴மின்” என்றார்கள். ‘அல்லாஹ்வின் தூதரே! பாவம் என்றால் என்ன?’ என்று மீண்டும் கேட்டார். அதற்கு நபி (ஸல்) அவர்கள், “உனது உள்ளத்தில் எது உருத்தலைத் தருகின்றதோ அதை விட்டு விடு (அது தான் பாவம்).” எனக் கூறினார்கள்.

நூல்: அஹ்மத், ஸில்ஸில...ஸஹீஹா-550

**இந்நபிமொழியின் கருத்துக்கள் வருமாறு:**

ஒரு மு∴மினுக்கு அவன் செய்யும் நற்செயல் மகிழ்ச்சியை தரும். அல்லாஹ்வுக்கு கட்டுப்படுவது அவனுக்கு விருப்பமாக இருக்கும். பாவம் செய்வதோ அவனுக்கு வருத்தமாக இருக்கும். இதற்கு நேர் மாற்றமாக நயவஞ்சகன் மற்றும் தீயவன் ஆவான். அல்லாஹ்வுக்கு கட்டுப்படுவதில் அவனுக்கு விருப்பம் இராது. அதில் அவன் இன்பத்தை உணர மாட்டான். பாவம் செய்வதிலோ அவனுக்கு வருத்தம் இருக்காது. அதில் அவன் கசப்பை உணர மாட்டான்.

நன்மை செய்தது பற்றி சந்தோஷப்படுவது கூலியை அதிகப்படுத்தும். தீமை செய்தது பற்றி வருந்துவது தண்டனையை எளிதாக்கும். (உண்மை) மு∴மினிடம் (சத்தியத் தையும் அசத்தியத்தையும் பிரித்தறியக்கூடிய) உள்ளம் சார்ந்த உரைகல் இருக்கும். அதன் மூலம் தனது ஈமானின் அளவை அவன் அறிந்து கொள்வான்.

40. நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தம்முடைய இறுதி ஹஜ்ஜின்போது கூறினார்கள்: “யார் மு∴மின் என்பதை உங்களுக்கு நான் அறிவிக்கட்டுமா? மனிதர்களின் உயிர் களுக்கும் உடைமைகளுக்கும் எவன் பாதுகாப்பு அளிக்கி றானோ அவனே மு∴மின். எவனுடைய நாவிலிருந்தும் கையிலிருந்தும் மக்கள் பாதுகாப்புப் பெறுகின்றார்களோ

அவனே முஸ்லிம். அல்லாஹ்வுக்குக் கட்டுப்படுவதில் எவன் மனதுடன் போராடுகின்றானோ அவனே போராளி. தீமை களையும், பாவங்களையும் எவன் வெறுக்கிறானோ அவனே முஹாஜிர் (துறந்தவர்).”

அறிவிப்பவர்: ஃபழாலா பின் உபைத்(ரலி),
நூல்: அஹ்மத், ஸில்ஸில...ஸஹீஹா-549

**இந்நபிமொழி கூறும் கருத்துக்கள:**

இங்கு நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் ஒரு முஃமினுக்கு அவனது சிறந்த தன்மைகளையும், உயர்ந்த பண்புகளையும் கொண்டு இலக்கணம் கூறியுள்ளார்கள். அது தான், மனிதர் களுக்கு அவன் தொல்லை தராமல் இருப்பது, அவனுடைய தீங்கிலிருந்து மக்கள் பாதுகாப்புப் பெற்று அவனிடம் நிம்மதி பெறுவதும், அவனை விட்டும் அவர்களின் உயிர், உடமை களுக்குப் பாதுகாப்பு கிடைப்பதும் ஆகும். மேலும் நபி (ஸல்) அவர்கள் முஹாஜிருக்கு வெறுப்பதிலும் துறப்பதிலும் மிக முக்கியமானதைக் கொண்டு விளக்கம் அளித்துள்ளார்கள். அது இதுதான்: பாவங்களிலிருந்து உடனடியாக விலகுவது, தீமைகளை வெறுப்பது, பாவம் புரிவதை விடுவது, மறைவான வற்றை அறிந்தவனான அல்லாஹ்விடம் தூய்மையான முறையில் பாவமன்னிப்புத் தேடுவது.

41. சுஃப்யான் பின் அப்தில்லாஹ்(ரலி) அறிவிப்பதாவது: நான் (நபி (ஸல்) அவர்களிடம்) ‘அல்லாஹ்வின் தூதரே! இஸ்லாத்தில் எனக்கு ஒரு வார்த்தையைச் சொல்லித் தாருங்கள். உங்களுக்குப் பிறகு அது பற்றி நான் யாரிடமும் கேட்கக் கூடாது’ என்று கேட்டேன். அதற்ககு அவர்கள், “நான் அல்லாஹ்வை நம்பினேன் என்று கூறு. பின்னர் அதில் உறுதியாக இரு” எனக் கூறினார்கள். நூல்: முஸ்லிம்-38

**இந்நபிமொழியில் அடங்கியுள்ள கருத்துக்கள் வருமாறு:**

(நபி (ஸல்) அவர்கள் கற்றுக் கொடுத்த) இந்த வார்த்தை தீன் நெறியின் சாரமாகும். இறைமார்க்கம் முழுவதும் இதில் தான் அடங்கியிருக்கிறது. இதன் கருத்து இதுதான்: அதாவது கொள்கையில், செயலில், சொல்லில் ஈமானை மேற்கொள்வதும் இம்மகத்தான வழிமுறையில் உறுதியாக-அதாவது நிரந்தரமாக தொடர்ந்து இருப்பதும் ஆகும். 'அல்லாஹ்வை நம்பினேன்' என்பது அவனது படைத்துப் பரிபாலிக்கும் தன்மை, அவனது இறைத்தன்மை, அவனது பெயர்கள், பண்புகள், இன்னும் அவனது வேதங்களில் அவன் இறக்கி அருளியவை, அவன் தூதர்களுக்கு அவன் அனுப்பிய தூதுச் செய்திகள் ஆகிய அனைத்தையும் நம்புவதை உள்ளடக்கும். உறுதியாக இரு என்பதன் பொருள் மார்க்கக் காரியங்களை அழகிய முறையிலும் நேரிய வழியிலும் நிறேவேற்றுவது ஆகும். மொத்த மார்க்கமும் இது தானே!

42. "தனது தந்தை, தனது பிள்ளை மற்றும் பிற மக்கள் யாவரையும் விட நான் மிகப் பிரியமானவராக ஆகாத வரை உங்களில் யாரும் நம்பிக்கை கொண்டவராக ஆக முடியாது" என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர்: அனஸ் (ரலி), நூல்: புகாரி-15, முஸ்லிம்-44

**இந்நபிமொழியில் அடங்கிய செய்திகள் வருமாறு:**

இங்கு நபித்தோழர்களை நோக்கிப் பேசப்பட்டாலும் சமுதாயத்திலுள்ள அனைவருக்கும் இது பொருந்தும். நேசிப்பதும் வெறுப்பதும் உள்ளம் சார்ந்த செயலாகும். இது மார்க்கத்தின் ஓர் அம்சமாகும். நம்பிக்கை (ஈமான்) கொண்டோருக்கிடையில் நம்பிக்கையில் (ஈமானில்) ஏற்றத்

தாழ்வு உண்டு. ஈமான் அதிகரிக்கவும் செய்யும், குறையவும் செய்யும். நபி (ஸல்) அவர்களை நேசிப்பது அவர்களின் சமுதாயத்தவர்களின் கடமையாகும். நபி (ஸல்) அவர்களை நேசிப்பது இம்மார்க்கத்தின் பலமான பிடிமானமாகும். நபி (ஸல்) அவர்களின் நேசத்தை விட தந்தை, பிள்ளை மற்றும் பிற மக்கள் ஆகிய அனைவரின் நேசத்திற்கு முன்னுரிமை தருவது ஹராமாகும்.

43. “தனக்கு விரும்புவதையே தன் சகோதரனுக்கும் விரும்பாத வரை உங்களில் யாரும் ஈமான் கொண்டவராக ஆக முடியாது” என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர்: அனஸ் (ரலி), நூல்: புகாரி-13, முஸ்லிம்-45

**இந்நபிமொழி கூறும் கருத்துக்கள்:**

உள்ளத்தின் செயல்கள் ஈமானில் அடங்கும். ஈமானில் மக்களிடையே ஏற்றத் தாழ்வுகள் உள்ளன. ஒரு முஸ்லிமின் மீது தன் சகோதர முஸ்லிமின் கடமை என்னவெனில் தனக்கு நலம் நாடுவதைப் போன்றே அவனுக்கும் நலம் நாட வேண்டும். தனக்கு விரும்பாததை தன் சகோதரனுக்கும் விரும்பக் கூடாது என்பதையும் இதிலிருந்து விளங்கலாம். மு∴மின்களை ஏமாற்றவோ மோசடி செய்யவோ கூடாது. ஏனெனில் இது நம்பிக்கையாளர்களின் பண்பல்ல. ஈமான் அதிகரிக்கவும் செய்யும் குறையவும் செய்யும். வழிபாடுகள் செய்வதன் மூலம் ஈமான் அதிகரிக்கும், பாவங்கள் மற்றும் தீமைகள் செய்வதன் மூலம் ஈமான் குறையும்.

## ஈமான் அதிகரிப்பதும் குறைவதும்

44. “என் உயிர் எவன் கைவசம் உள்ளதோ அவன் மீது சத்தியமாக! நீங்கள் என்னிடம் இருக்கும்போது எந்த

நிலையில் இருந்தீர்களோ அந்த நிலையிலும் இறைநினை விலும் நீடிப்பீர்களானால் உங்கள் படுக்கைகளிலும் (நீங்கள் செல்லும்) வழிகளிலும் வானவர்கள் உங்களுடன் கை கோர்த்துக் கொள்வார்கள். ஆயினும் ஹன்ழலாவே! சிறிது நேரம் இறைநினைவிலும் சிறிது நேரம் உலகக் காரியங் களிலும் என இருந்துகொள்!" என அல்லாஹ்வின் தூதர்(ஸல்) அவர்கள் கூறியதாக ஹன்ழலா (ரலி) அறிவிக்கிறார்கள்.

(ஹதீஸின் சுருக்கம்) நூல்: முஸ்லிம்-2750, திர்மிதி-2514

**இந்நபிமொழி கூறும் செய்திகள் பின் வருமாறு:**

மு..மினின் நிலை வேறுபடுகின்றது. சிறிது பராமுகம் அவனுக்கு அவசியம் ஏற்பட்டுவிடுகின்றது. நபித்தோழர்களின் நிலைகளில் பெரும்பாலானது நபிகள் நாயகத்தின் அவையில் அவர்கள் அமர்ந்திருந்த நிலைதான். பாவம் செய்வது அடியானுக்கு அவசியம் போன்றது. அதனால் அவனுடைய பெறுமை நீங்கி, அவனது அடிமைத்தனம் உறுதி பெறும். தன் எஜமானிடம் அவன் மன்னிப்புக் கோருவான்.படைப்பினங்களை உருவாக்குவதும் அழிப்பதும் அல்லாஹ்வுக்கு எளிதானது. மு..மின்களில் உத்தமர்கள் சில வேளை மலக்குகளைக் காண்பார்கள். சிலவேளை அவர்களுடன் கைகுலுக்குவார்கள். இது சில நல்லடியார்களுக்கு நடந்துள்ளது. மலக்குகள் நல்லோர்களை அவர்களது வீடுகளில் தரிசிப்பார்கள்.

45. நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: "ஆடை இத்துப் போவதைப்போல உங்களில் ஒருவரது உள்ளத்தில் ஈமான் இத்துப் போய்விடுகிறது. எனவே உங்கள் உள்ளங்களில் ஈமானைப் புதுப்பிக்குமாறு அல்லாஹ்விடம் கேளுங்கள்."

அறிவிப்பவர்: அப்துல்லாஹ் பின் அம்ர்(ரலி),

நூல்: தப்ரானி கபீர், ஸில்ஸில...ஸஹீஹா-1585

**இந்நபிமொழியின் கருத்துக்கள் வருமாறு:**

பாவம் செய்வதனால் ஈமான் பலவீனமடைகிறது. (இறை நினைவை விட்டும்) பராமுகமாவதால் உள்ளத்தில் ஈமான் இத்துப் போய்விடுகிறது. திக்ர், துஆ, திருக்குர்ஆன் ஓதுதல், பொதுவாக நற்செயல் புரிதல் ஆகியவற்றின் மூலம் ஈமான் புதுப்பிக்கப்பட வேண்டும்- ஆடை புதுப்பிக்கப்படுவதுபோல. அடியான் தன் இறைவனிடம் ஈமான் அதிகரிப்பதற்கும், அதில் உறுதியுடன் நிரந்தரமாக இருப்பதற்கும் இறைஞ்ச வேண்டும்.

46. "ஒருவன் விபச்சாரம் செய்யும்போது அவனிடமிருந்து ஈமான் வெளியேறி (அவனுக்கு மேல்) மேகத்தைப் போல் நிற்கும். பிறகு அவன் அதிலிருந்து (தவ்பாச் செய்து) மீண்டு விட்டால் அந்த ஈமான் அவனிடம் திரும்பிவிடும்" என நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரலி),

நூல்: அபூதாவூத்-4690, ஸில்ஸில...ஸஹீஹா-509

**இந்நபிமொழியில் அடங்கியுள்ள கருத்துக்கள் வருமாறு:**

பாவங்கள் புரிவதன் கெடுதி விளக்கப்பட்டுள்ளது. அது ஈமானின் பரிபூரணத்தைக் கெடுத்து அதில் குறையை ஏற்படுத்திவிடும். ஈமான் சில நேரங்களில் அகன்று விடுகிறது. பாவம் செய்வதால் ஈமானுக்கு எந்த இடைஞ்சலும் கிடையாது எனக் கூறுகின்ற முர்ஜிஆக்களுக்கு இந்த ஹதீஸ் மறுப்பாகும். ஈமான் அதிகரிக்கவும் செய்யும் குறையவும் செய்யும் என்பது இங்கு சுட்டிக்காட்டப்பட்டுள்ளது. சுன்னத் ஜமாஅத்தினரின் வழிமுறையும் இதுவேயாகும்.

புலனுணர்வுக்கு உட்படாத விஷயங்கள் சிலபோது புலனுணர்வுக்கு உட்பட்ட விஷயங்களின் வடிவில் எடுத்துச்

சொல்லப்படும். விபச்சாரத்தின் தீங்கு இங்கு சுட்டிக்காட்டப் பட்டுள்ளது. அது பாவங்களில் மிக மோசமான பாவமாகும். ஒரு அடியான் தனது ஈமானை, அது விலகிப் போவதை விட்டும் பாதுகாத்துக் கொள்ள வேண்டும். பாவங்களிலிருந்து விலகிக் கொள்வதன் மூலமும், தூய்மையான முறையில் தவ்பா செய்வதன் மூலமும் ஈமானைப் பாதுகாக்கலாம்.

47. “விபச்சாரம் செய்பவன் விபச்சாரம் செய்யும்போது மு.்.மினாக இருப்பதில்லை. மது அருந்துபவன் மது அருந்தும் போது மு.்.மினாக இருப்பதில்லை. திருடுபவன் திருடும்போது மு.்.மினாக இருப்பதில்லை. மக்கள் எல்லோரும் பார்த்துக் கொண்டிருக்க-மதிப்பு மிக்க பொருளை கொள்ளையடிப்பவன், கொள்ளையடிக்கும் நேரத்தில் மு.்.மினாக இருப்பதில்லை” என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதாக அபூஹுரைரா (ரலி) அறிவிக்கிறார்கள்.

நூல்: புகாரி-5578, முஸ்லிம்-57

**இந்நபிமொழியில் அடங்கியுள்ள கருத்துக்கள் வருமாறு:**

பொதுவாக பெரும் பாவங்கள் பரிபூரணமான ஈமானுக்கு எதிரானதாகும். ஈமான் ஒரு மு.்.மினை பாவங்களை விட்டும் தடுக்கிறது. பாவங்கள் புரிவதால் ஈமானுக்கு எந்த இடையூறும் ஏற்படாது என்று கூறம் முர்ஜிஆக்களுக்கு இந்த ஹதீஸ் மறுப்பாக அமைகிறது. பெரும் பாவங்களைச் செய்வோருக்கு இதில் கடுமையான எச்சரிக்கை உள்ளது. பாவங்களில் பெரும்பாவங்களும் சிறு பாவங்களும் உள்ளன.

## லாஇலாஹ இல்லல்லாஹ்வின் நிபந்தனைகள்

48. அபூஹுரைரா (ரலி) அறிவிப்பதாவது: நாங்கள் நபி(ஸல்) அவர்களைச் சுற்றி அமர்ந்திருந்தோம். எங்களுடன் அபூபக்ரும்

உமரும் இன்னும் சிலரும் இருந்தார்கள். அப்போது நபி(ஸல்) அவர்கள் எங்களுக்கு மத்தியிலிருந்து எழுந்து வெளியே சென்றார்கள். வெகு நேரமாகியும் அவர்கள் திரும்பவில்லை. எதிரிகளிடமிருந்து ஏதேனும் தீங்கு நேர்ந்துவிட்டதோ என நாங்கள் அஞ்சினோம். உடனே நாங்கள் (அவ்விடத்தி லிருந்து) எழுந்தோம். முதலில் நான் தான் பயந்தேன். நான் நபி (ஸல்) அவர்களைத் தேடிச் சென்று இறுதியில் பனூ நஜ்ஜார்களான அன்ஸார்களுக்குரிய ஒரு தோட்டத்திற்கு வந்தேன். அங்கு (உள்ளே நுழைவதற்கு) ஏதாவது வாசல் இருக்கிறதா? என்று தேடிப் பார்த்தேன்; கிடைக்கவில்லை.

அப்போது வெளியே உள்ள ஒரு கிணற்றிலிருந்து தோட்டத்தினுள் செல்லக்கூடிய வாய்க்கால் ஒன்று இருந்தது. அதன் வழியே குள்ள நரி பதுங்கிச் செல்வதுபோல் பதுங்கிச் சென்று நபி(ஸல்)அவர்களிடம் சென்றேன். “அபூஹுரைராவா?” என்றார்கள். ‘அல்லாஹ்வின் தூதரே! ஆம்! (நான் தான்)’ என்றேன். நபி (ஸல்) அவர்கள், “என்ன விஷயம்’ என்றார்கள். ‘நீங்கள் எங்களிடையே இருந்தீர்கள்; (திடீரென்று) எழுந்து சென்று விட்டீர்கள். வெகு நேரமாகியும் நீங்கள் திரும் வில்லை. உங்களுக்கு எதிரிகளிடமிருந்து ஏதேனும் துன்பம் நேர்ந்து விட்டதோ என நாங்கள் அஞ்சினோம். நான் தான் முதலில் பயந்தேன். எனவே இந்தத் தோட்டத்திற்கு வந்தேன். குள்ள நரி பதுங்குவது போல பதுங்கிப் பதுங்கி (உள்ளே) வந்தேன். மக்கள் எனக்குப் பின்னால் காத்திருக்கிறார்கள்’ என்று கூறினேன்.

நபி(ஸல்)அவர்கள், அபூஹுரைரவே! என்று கூறி, அவர்க ளுடைய பாதணிகளை என்னிடம் தந்து, “என்னுடைய இந்த இரண்டு செருப்புகளைக் கொண்டு செல். இத்தோட்டத்திற்கு

அப்பால் உன்னை சந்திப்பவர் வணக்கத்திற்குரியன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை என உள்ளத்தில் உறுதியாக நம்பி சாட்சியம் கூறினால் அவருக்கு சொர்க்கம் உண்டென்று சுபச்செய்தி சொல்" என்றார்கள். பிறகு நான் (சென்று) முதலில் சந்தித்தது உமரைத் தான். உமர் (ரலி) அவர்கள், 'அபூஹுரைராவே! இது என்ன இரண்டு செருப்புகள்?' என்று கேட்டார்கள். நான், 'இவை இரண்டும் நபி (ஸல்) அவர்களின் செருப்புகள். வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை என உள்ளத்தில் உறுதிகொண்டவாறு சாட்சி சொல்பவரை நான் சந்தித்தால் அவருக்கு சொர்க்கம் குறித்து நற்செய்தி கூறுமாறு இவ்விரண்டையும் கொடுத்து என்னை அவர்கள் அனுப்பி வைத்தார்கள்' என்று சொன்னேன். உமர் (ரலி) அவர்கள் தமது கையால் என் நெஞ்சில் ஓங்கி அறைந்தார்கள். நான் பின்புறமாக கீழே விழுந்தேன். 'அபூஹுரைராவே திரும்பிச் செல்லும்' என்றார்கள்.

உடனே நான் நபி (ஸல்) அவர்களிடம் திரும்பிச் சென்றேன். எனக்கு அழுகை வந்தது. உமர் (ரலி) அவர்களும் என்னைப் பின் தொடர்ந்து எனக்குப் பின்னால் வந்து சேர்ந்தார்கள். "அபூஹுரைராவே உனக்கு என்ன நேர்ந்தது?' என நபி (ஸல்) அவர்கள் கேட்டார்கள். 'நான் உமரைச் சந்தித்தேன். நீங்கள் எனக்குச் சொல்லி அனுப்பிய செய்தியை அவரிடம் சொன்னேன். உடனே அவர் என் நெஞ்சில் ஓங்கி அறைந்து விட்டார். நான் பின் பக்கமாக விழுந்து விட்டேன்' என்று கூறினேன்.நபி (ஸல்) அவர்கள், "நீர் திரும்பிச் செல்லும்" என்று கூறிவிட்டு (உமரை நோக்கி) "உமரே! இவ்வாறு நடந்து கொள்ள உம்மைத் தூண்டியது எது?' என வினவினார்கள்.

அதற்கு உமர், 'அல்லாஹ்வின் தூதரே! என் தாயும் தந்தையும் தங்களுக்கு அர்ப்பணமாகட்டும்! தாங்கள் தான் அபூஹுரைராவை தாங்களின் இரு பாதணிகளைக் கொடுத்து, "வணக்கத்திற்குரியன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாரும் இல்லை என உள்ளத்தில் உறுதியாக நம்பி சாட்சியம் கூறுபவருக்கு சொர்க்கம் உண்டென்று சுபச்செய்தி சொல்" என்று அனுப்பி வைத்தீர்களா?' என்று கேட்டார்கள். அதற்கு நபி (ஸல்) அவர்கள், "ஆம்!" என்றார்கள். உமர்(ரலி) அவர்கள், 'அவ்வாறு செய்யாதீர்கள். ஏனெனில் மக்கள் அதையே நம்பி அமல் செய்யாமல் இருந்துவிடுவார்கள்' எனக் கூறினார்கள். அதற்கு நபி (ஸல்) அவர்கள் அவர்களை அமல் செய்ய விட்டு விடுங்கள் எனக் கூறினார்கள். (முஸ்லிம்-31)

**இந்நபிமொழியிலிருந்து பெறப்படும் செய்திகள்:**

ஒரு செய்தியை நம்புவதற்கு அடையாளமாக எதை யாவது கொடுத்து அனுப்புதல். சந்தோஷமான செய்தியை பொதுவாக எல்லோருக்கும் சொல்லுதல். மக்களில் சிலருக்கு குழப்பம ஏற்படாது என்ற அச்சம் இல்லாதிருந்தால் கல்வியை எல்லோருக்கும் பரப்பலாம். இங்கு உமர் (ரலி) அவர்கள் அபூஹுரைரா(ரலி) அவர்களைச் சொல்ல வந்த செய்தியைச் சொல்ல விடாமல் திருப்பி அனுப்பி விட்டார்கள். மேலும் அவர்கள், மக்கள் அச்செய்தியை நம்பி அமல் செய்யாமல் இருந்து விடுவார்களோ என தாம் அஞ்சுவதாகவும் நபி (ஸல்)அவர்களிடம் கூறினார்கள். நபி(ஸல்) அவர்களும் அதை ஏற்றுக் கொண்டார்கள்.

49. "வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாரும் இல்லை என்றும் நான் அல்லாஹ்வுடைய தூதர் என்றும் சாட்சி சொல்கிறேன். இவ்விரு சாட்சியத்தில் எந்த

சந்தேகமும் கொள்ளாமல் ஒரு மனிதன் அல்லாஹ்வைச் சந்திப்பானேயானால் அவன் சொர்க்கம் செல்வான்" என அல்லாஹ்வின் தூதர்(ஸல்)அவர்கள் கூறினார்கள். (சுருக்கம்) அறிவிப்பவர் அபூஹுரைரா (ரலி), நூல்: முஸ்லிம்-27, அஹ்மத்

**இந்நபிமொழியில் அடங்கியுள்ள கருத்துக்கள் வருமாறு:**

ஏகத்துவ சாட்சி, தூதுத்துவ சாட்சி என இரண்டு சாட்சி களையும் (ஒரு சேர) ஒருவன் மொழிய வேண்டும் என இங்கு நிரூபணமாகிறது. அவிரண்டும் ஒன்றுக்கொன்று அவசிய மானதாகும். அவ்விரண்டில் எந்த ஒன்றும் மற்றொன்றைக் கொண்டல்லாமல் பரிபூரணமாகாது. இவ்விரண்டையும் கொண்டு சாட்சி சொல்பவருக்கு இவ்விரண்டிலும் உறுதி இருப்பது அவசியமாகும். காரணம் இவ்விரு சாட்சிகளில் சந்தேகம் கொள்வது இவ்விரண்டையும் விட்டு வெளியேறு வதாக அமையும்.

ஏகத்துவவாதிகளின் ஒதுங்குமிடம் சொர்க்கமாகும். லாஇலாஹ இல்லல்லாஹ்வை உறுதியாக நம்பியவன் அதன் தேட்டத்தின் பிரகாரம் அமல் செய்ய வேண்டும். உள்ளத்தில் கொள்ளும் எகத்துவ நம்பிக்கையும் நற்செயல்களில் ஒன்றாகும். ஏகத்துவ சாட்சியை மொழிவது மாத்திரம் போதாது (அமல் செய்வதும் அவசியமாகும்).

50. அபூமூஸா அல்அஷ்அரி (ரலி) அறிவிப்பதாவது: நான் நபி (ஸல்)அவர்களிடம் வந்தேன். என்னுடன் என் சமூகத்தைச் சேர்ந்த சிலரும் இருந்தனர். நபி (ஸல்) அவர்கள் (எங்களிடம்) "சந்தோஷப்படுங்கள், உங்களுக்குப் பின்னால் உள்ள மக்களுக்கு இந்தச் சுபச்செய்தியைச் சொல்லுங்கள். அதாவது வணக்கத்திற்குரியன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாரும்

இல்லை என்பதை உண்மையாக நம்பி சாட்சி சொல்பவர் சொர்க்கம் செல்வார்" என்று கூறினார்கள். பிறகு மக்களுக்கு (இது குறித்து) நற்செய்தி சொல்வதற்காக நாங்கள் நபி (ஸல்) அவர்களிடமிருந்து வெளியேறினோம். (வழியில்) உமர் (ரலி) அவர்களைச் சந்தித்தோம். அவர்கள் எங்களை நபி(ஸல்) அவர்களிடம் திரும்ப அழைத்துச் சென்று, 'அல்லாஹ்வின் தூதரே! அப்படியானால் மக்கள் (இதை நம்பி) அமல் செய்யாமல் இருந்துவிடுவார்களே!' என்று கூறினார்கள். அதற்கு நபி (ஸல்) அவர்கள் ஒன்றும் கூறவில்லை.

(அஹ்மத், ஸில்ஸில...ஸஹீஹா-712)

**இந்நபிமொழி கூறும் செய்திகள் பின் வருமாறு:**

உள்ளங்களுக்கு விருப்பமான காரியங்களைக் கொண்டு நற்செய்தி கூறல். அதில் மகத்தானது தூய ஏகத்துவவாதிகளுக்குச் சொர்க்கம் குறித்து நற்செய்தி சொல்வதாகும். வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாரும் இல்லை என்று சொல்பவருக்கு அது பலன் தரும், எப்போதெனில், அவர் அதன் மீது நம்பிக்கை கொண்டு தன் உள்ளத்திலிருந்து அதைக் கூறினால், தான் கூறியதில் உண்மையானவராகவும் அல்லாஹ்வுக்கு வாய்மையானவராகவும், அந்த நம்பிக்கையின் தேட்டத்தின்படி செயல்பட்டவராகவும் இருந்தால் அது அவருக்குப் பலனளிக்கும். இவ்வாறு நடந்து கொண்டவரின் ஒதுங்குமிடம் இன்பம் நிறைந்த சொர்க்கச் சோலைகளாகும்.

முஹம்மத் (ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் தூதராவார்கள் என்று சாட்சி சொல்லாத வரை வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை என்று கூறும் சாட்சி முழமை பெறாது. நற்செயல்களில் மிக்க மேலானது

இந்த ஏகத்துவ சாட்சி தான். இறைத்தூதர்கள் மக்களை அழைத்ததும் இதன் பக்கம் தான்.

51. "வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை என்பதை அறிந்த நிலையில் மரணித்தவர் சொர்க்கம் செல்வார்" என நபி (ஸல்) அவர்கள் கூறியதாக உஸ்மான் (ரலி) அறிவிக்கிறார்கள். நூல்: முஸ்லிம்-26

**இந்நபிமொழியின் விளக்கம் வருமாறு:**

இங்கு அறிதல் என்பது அல்லாஹ் ஒருவன் என்பதையும், அவன் வணக்கத்திற்குரியவன் என்பதையும் இவ்விரண்டிலும் அவன் தனித்தவன் என்பதையும் உறுதியாக நம்புவது, இந்த நம்பிக்கையில் வாய்மையுடனும், இதைக் கூறுவதில் உண்மையுடனும் நடந்து கொள்வது, மேலும் இந்த உண்மையான அடிப்படையின்படி செயல்படுவதுமாகும். ஏனெனில் அல்லாஹ்வின் திருப்பொருத்தத்தையும் அவனது சொர்க்கத்தில் தங்குமிடத்தையும் அடைவதற்காக.

'வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை' என்ற இக்கலிமாவில் எதிர்மறை, உடன்பாடு என இரு அம்சங்கள் உள்ளன. வணக்கத்திற்குரிய தகுதி அல்லாஹ்வைத் தவிர வேறு யாருக்கும் எதற்கும் கிடையாது என மறுப்பது எதிர்மறை. அந்தத் தகுதியை அல்லாஹ்வுக்கு மட்டும் கொடுப்பது உடன்பாடு.

## லாஇலாஹ இல்லல்லாஹ்வின் சிறப்பு

52. நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: "மறுமையில் என்னுடைய சமுதாயத்திலிருந்து ஒரு மனிதனை அல்லாஹ் படைப்பினங்களுக்கு மத்தியில் தனியாகக் கொண்டு வந்து அவனிடம் 99 பதிவேடுகளை விரித்துக்

காட்டுவான். ஒவ்வொரு பதிவேடும் பார்வை எட்டும் தூரம் அளவுக்கு (நீளமாக) இருக்கும். பிறகு, ‘இதில் எதையும் நீ மறுக்கிறாயா? (செயல்களைக்) கண்காணித்து எழுதக்கூடிய என்னுடைய எழுத்தாளர்கள் உனக்கு ஏதும் அநீதி இழைத் திருக்கிறார்களா?’ என்று கேட்பான். அதற்கு அவன் ‘இல்லை இறைவனே!’ எனக் கூறுவான். பிறகு அல்லாஹ், ‘உன்னிடம் (நீ செய்தவற்றுக்கு) சமாதானம் உண்டா?’ அல்லது வேறு ஏதேனும் நன்மை உன்னிடம் உண்டா?’ எனக் கேட்பான். அவன் திகைத்துப் போய் ‘இல்லை இறைவனே!’ எனக் கூறுவான். உடனே அல்லாஹ், ‘ஆம்! எம்மிடம் உனக்காக ஒரே ஒரு நன்மை இருக்கிறது. இன்றைய தினம் உனக்கு அநீதம் இழைக்கப்பட மாட்டாது’ என்று கூறுவான்.

அதன் பிறகு அவனுக்காக ஒரு சீட்டு வெளிக் கொண்டு வரப்படும். அதில் வணக்கத்திற்குரிய இறைவன் அல்லாஹ் வைத் தவிர வேறு யாருமில்லை என்றும் முஹம்மத் அல்லாஹ்வின் தூதர் என்றும் நான் சாட்சி சொல்கிறேன் என்று இருக்கும். ‘அதைக் கொண்டு வாருங்கள்’ என்று அல்லாஹ் கூறுவான். அப்போது அந்த மனிதன் ‘என் இறைவனே! இத்தனைப் பதிவேடுகளுக்கிடையில் இது என்ன சீட்டு?’ எனக் கேட்பான்.அதற்கு, ‘உனக்கு அநீதம் இழைக்கப் படமாட்டாது (நீ அஞ்ச வேண்டாம்)’ என்று கூறப்படும். பிறகு (தராசின்) ஒரு தட்டில் அந்த ஏடுகளும் மற்றொரு தட்டில் அந்தச் சீட்டும் வைக்கப்படும். ஏடுகள் கனம் குறைந்து, அந்தச் சீட்டின் கனம் கூடிவிடும். அல்லாஹ்வின் பெயருடன் எதுவும் கனத்து விட முடியாது. அவன் அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்புடையோன்.”

அறிவிப்பவர்: அப்துல்லாஹ் பின் அம்ர்(ரலி),

நூல்: அஹ்மத், ஸில்ஸில...ஸஹீஹா135

**இந்நபிமொழியில் அடங்கியுள்ள கருத்துக்கள் வருமாறு:**

லாஇலாஹா இல்லல்லாஹ்வுடைய மகத்துவமும், தராசில் அது பாரமானதாக இருக்கும் என்பதும் இந்த நபிமொழியில் சுட்டிக்காட்டப்பட்டுள்ளது. இந்த லாஇலாஹ இல்லல்லாஹ் எனும் கலிமா நற்செயல்களில் (தராசுத் தட்டுக்கு) மிகக் கனமானதும், நன்மைகளில் மிகப் பெரியதும், வழிபாடுகளில் மிக முக்கியமானதும் ஆகும். வணக்கத்திற்குரிய இறைவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை என்பதை யார் மெய்ப்படுத்தினாரோ, இந்த நம்பிக்கையில் வாய்மையுடனும் இதை மொழிவதில் உண்மையாகவும் நடந்து கொண்டாரோ அவர் அந்த நம்பிக்கையின் தேட்டத்தின்படி செயல்படும் போது அது அவருக்குப் பலன் தரும். அவரது பாவங்கள் அவருக்காக மன்னிக்கப்படும்.

இந்நபிமொழியில் அல்லாஹ்வின் அருளும் அவனுடைய கருணையும் கூறப்பட்டுள்ளது. மனிதன் தன் இறைவன் மீது நல்லெண்ணம் கொள்ள வேண்டும். அவனுடைய மன்னிப்பில் நம்பிக்கை இழந்துவிடக் கூடாது. அவன் அருளில் நிராசை அடைந்துவிடக் கூடாது. (மறுமையில்) சிலர் சாட்சிகளுக்கு மத்தியில் விசாரிக்கப்படுவார்கள். நிச்சயமாக அல்லாஹ் தன் அடியார்களுக்கு (சிறிதும்) அநீதி இழைப்பவன் அல்ல. மறுமையில் மனிதனிடம் அல்லாஹ் மொழிபெயர்ப்பாளர் யாருமின்றி நேரடியாக விசாரணை நடத்துவான்.(மறுமையில்) வினைச்சுவடிகள் தரப்படும் என்பதும் நன்மை தீமைகள் யாவும் பதிவு செய்யப்படுகின்றன என்பதும் இந்நபிமொழியி லிருந்து நிரூபணமாகின்றது. தவ்ஹீதின் சிறப்பு, மனிதர்களின் செயல்களைக் கண்காணித்து பதிவு செய்யக்கூடிய

வானவர்களின் மீது நம்பிக்கை கொள்வது, நன்மைகள் தீமைகளை அழித்துவிடுகின்றன என்பன யாவும் இந்நபி மொழியில் சுட்டிக்காட்டப்பட்டுள்ளன.

53. நபி(ஸல்)அவர்கள் எங்களை ஒரு படையுடன் அனுப்பி வைத்தார்கள். நாங்கள் ஜுஹைனா கோத்திரைத்தைச் சேர்ந்த ஹுரகாத் கிளையார் மீது காலையில் திடீர் தாக்குதல் தொடுத்தோம். அப்போது நான் ஒரு மனிதனைப் பிடித்தேன். உடனே அவர் லாஇலாஹ இல்லாஹ் என்று கூறினார். நான் அவரைக் குத்தி (கொன்று) விட்டேன். அது என் உள்ளத்தில் உருத்தலைத் தந்தது. அதனால் நபி (ஸல்) அவர்களிடம் (வந்து) அது பற்றிக் கூறினேன். அதற்கு நபி (ஸல்)அவர்கள், “லாஇலாஹ இல்லல்லாஹ் என்று கூறியவரையா கொன்று விட்டாய்?” எனக் கேட்டார்கள். ‘அல்லாஹ்வின் தூதரே! (என்) ஆயுதத்திற்குப் பயந்தே அவர் அதைச் சொன்னார்’ என்றேன். அதற்கு நபி (ஸல்) அவர்கள், “(உன்) ஆயுதத்திற்குப் பயந்து தான் அதைச் சொன்னாரா இல்லையா என்று அவருடைய உள்ளத்தைத் திறந்தா பார்த்தாய்?”எனக் கேட்டார்கள். ‘அந்த நாளில் நான் இஸ்லாத்தை ஏற்றிருக்க வேண்டுமே! என்று நான் ஆசைப்படும் அளவுக்கு அதைத் திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டே இருந்தார்கள்’ என உஸாமா பின் ஸைத் (ரலி) அறிவிக்கிறார்கள். நூல்: புகாரி-4269, முஸ்லிம்-96

**இந்நபிமொழியிலுள்ள கருத்துக்கள் வருமாறு:**

லாஇலாஹ இல்லல்லாஹ் எனக் கூறியவரின் உயிர் பாதுகாக்கப்படும். ஆயினும் அவரது விவகாரம் அல்லாஹ் விடம் இருக்கும். லாஇலாஹ இல்லல்லாஹ் என்று கூறியவர் (அவருடைய உயிர், உடைமை, மானத்திற்கு பங்கம் விளைவிக்கப்படுவதிலிருந்து) காக்கப்படுவார். இவ்வுலகில்

கா.ஃ.பிரிடம் நடந்து கொள்வதுபோல் நயவஞ்சகனிடம் நடந்து கொள்ளப்பட மாட்டாது. அவன் கா.ஃ.பிரை விடக் கொடிய வனாக இருந்தாலும் சரி. ஏனெனில் அவன் இறைநிராகரிப்பை மறைத்துக் கொண்டு இஸ்லாத்தை வெளிப்படுத்துபவன்.

லாஇலாஹ இல்லல்லாஹ் என்று சொல்வதில் யார் வாய்மையோடு நடந்து கொள்கிறாரோ அது அவருக்கு மறுமையில் பலன் தரும். ஒரு அடியான் போர் செய்யும்போது எதிரியினுடைய உண்மை நிலையைத் தெரிந்து கொள்வது அவசியமாகும். காரணம் குற்றமற்ற எவரின் இரத்தத்தையும் அவன் சிந்திவிடக் கூடாது. முஸ்லிமான எந்த உயிரையும் அவன் கொன்று விடக் கூடாது என்பதற்காக. மக்களின் உள்ளத்திலுள்ள நம்பிக்கையைத் தெரிந்து கொள்வது ஒரு மனிதனின் வேலையல்ல. மாறாக இது அல்லாஹ்விடத்தில் உள்ளதாகும்.

## அல்லாஹ்வின் பெயர்களும் பண்புகளும்

அல்லாஹ் கூறுகிறான்: “அவனே அல்லாஹ், அவனைத் தவிர வணக்கத்திற்குரியவன் வேறு யாருமில்லை. அவன் மறைவானதையும் வெளிப்படையானதையும் அறிபவன். அவன் அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்புடையோன். அவனே அல்லாஹ், அவனைத் தவிர வணக்கத்திற்குரியவன் வேறு யாருமில்லை. அவன் அரசன், பரிசுத்தமானவன், நிம்மதியளிப்பவன், அடைக்கலம் தருபவன், கண்காணிப்பவன், மிகைத்தவன், ஆதிக்கம் செலுத்துபவன், பெருமைக்குரியவன், அவர்கள் இணை கற்பிப்பதை விட்டும் அல்லாஹ் தூயவன். அவனே அல்லாஹ், படைப்பவன், உருவாக்குபவன், வடிவமைப்பவன், அவனுக்கு அழகிய பெயர்கள் உள்ளன.

வானங்களிலும் பூமியிலும் உள்ளவை அவனைத் துதிக்கின்றன. அவன் மிகைத்தவன், ஞாமிக்கவன்." (59:22-24)

"அல்லாஹ்வுக்கு அழகிய பெயர்கள் உள்ளன. அவற்றின் மூலமே அவனிடம் பிரார்த்தியுங்கள். அவனது பெயர்களைத் திரித்துக் கூறுவோரை விட்டு விடுங்கள். அவர்கள் செய்து வந்ததற்காக அவர்கள் தண்டிக்கப்படுவார்கள். (7:180)

"அல்லாஹ்வுக்கு 99 பெயர்கள் உள்ளன. யார் அவற்றைப் பேணுபவர் சொர்க்கம் செல்வார். அல்லாஹ் ஒற்றையானவன்; ஒற்றையை அவன் விரும்புகிறான்" என அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரலி),

நூல்: புகாரி-2736, முஸ்லிம்-2677

**இந்நபிமொழியிலுள்ள கருத்துக்கள்:**

அல்லாஹ்வுடைய ஏகத்துவத்தின் பூரணத்துவம் இங்கு சுட்டிக்காட்டப்பட்டுள்ளது. அவன் ஒருவன், அவனுக்கு இணை துணை எதுவுமில்லை. விரும்புதல், நேசித்தல் எனும் பண்பு அல்லாஹ்வுக்கு இருக்கிறது என்பது நிரூபணமாகிறது. அல்லாஹ் பல வகையான மனிதர்கள், சொற்கள், செயல்கள், இடங்கள், காலங்கள் ஆகியவற்றை விரும்புகிறான். எண்களில் ஒற்றப்படையை அல்லாஹ் விரும்புகிறான். ஷரீஅத்தில் அதிகமான விஷயங்கள் ஒற்றப்படையில் தான் உள்ளன. பகல் தொழுகை ஒற்றப்படையில் முடிகிறது. அது மக்ரிபாகும். இரவுத் தொழுகையில் இறுதித் தொழுகை வித்ரு- ஒற்றைப்படையாகும். தவா..ப், ஸயீ இவற்றின் சுற்றுக்கள் ஏழு ஆகும். சுப்ஹானல்லாஹ் என்று தஸ்பீஹ் கூறுவது 33 தடவையாகும். அல்லாஹ்வின் பெயர்கள் 99.

55. “அஸ்ஸலாம் (சாந்தி) என்பது அல்லாஹ்வின் பெயர் களில் ஒன்றாகும். இது இப்புவியில் வைக்கப்பட்டுள்ளது. எனவே உங்களுக்கிடையில் ஸலாமைப் பரப்புங்கள்” என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். (அல்அதபுல் முஃப்ரத், ஸில்ஸிலதுல் அஹாதீதிஸ் ஸஹீஹா-184)

**இந்நபிமொழியிலுள்ள விஷயங்கள் வருமாறு:**

அஸ்ஸலாம் என்னும் பெயர் அல்லாஹ்வுக்குரியதாகும். அவனுக்குரிய பெயர்கள் ஏராளம் உள்ளன. அவை அனைத்தும் குர்ஆன், ஹதீஸ் ஆதாரத்திற்கு உட்பட்டவை. அல்லாஹ்வின் பெயர்கள் மற்றும் பண்புகள் சமபந்தமான ஆதாரங்களை மனிதன் அறிந்து அவற்றில் தனக்குப் பொருத்தமான பெயர்கள், பண்புகளின் தேட்டத்தின்படி அமல் செய்வது அவசியமாகும். உதாரணமாக அஸ்ஸலாம் (சாந்தி அல்லது நிம்மதி அளிப்பவன்), அர்ரஹ்மான் (அளவற்ற அருளாளன்), அல்கரீம் (கொடையாளன், சங்கைக்குரியவன்), அல்ஹலீம் (சகிப்புத் தன்மை மிக்கவன்) போன்ற பண்புகள்.

முஃமின்களுக்கிடையில் ஸலாமைப் பரப்புவது கடமை யாகும். ஏனெனில் அதில் சகோதரத்துவம், நேசம், பாசம் இருக்கிறது. ஸலாம் சொல்வதன் நோக்கங்களில் இதுவும் ஒன்றாகும். அதாவது அது நம்பிக்கையாளர்களுக்கிடையில் நல்லிணக்கத்தை ஏற்படுத்தும். ஷரீஅத்தின் விருப்பமும் அது தானே! எவருடைய நாவாலும் கரத்தாலும் பிற முஸ்லிம்கள் அச்சமற்று இருக்கிறார்களோ அவரே முஸ்லிம்.

56. திறந்த வெளியில் வேட்டியின்றி குளிக்கின்ற ஒரு மனிதரை நபி (ஸல்) அவர்கள் கண்டார்கள். உடனே மிம்பரில் ஏறி அல்லாஹ்வைப் புகழ்ந்து பாராட்டி விட்டு, “அல்லாஹ் நாணமிக்கவன், மறைப்பவன், நாணத்தையும் மறைப்பதையும்

அவன் விரும்புகிறான். எனவே உங்களில் ஒருவர் குளித்தால் மறைத்துக் கொள்ளட்டும்" என்று கூறினார்கள்.

அறிவிப்பவர்: ய.்லா பின் உமய்யா (ரலி),
நூல்: அபூதாவூத்-4012, ஸஹீஹுல் ஜாமி.்-1775

**இந்நபிமொழியில்:**

இரண்டு பெயர்கள் அல்லாஹ்வுக்குரியவையாகும். அவை ஹயிய்யுன், ஸித்தீருன்(அதிகம் நாணமுறுபவன், மறைப்பவன்) அல்லாஹ் கூறுகிறான்: "கொசுவையோ அதை விட அற்பமானதையோ உதாரணம் கூற அல்லாஹ் வெட்கப்பட மாட்டான்." (2:26) ஆம்! அல்லாஹ்வுக்கு அவனுடைய கண்ணியத்திற்கும் மகத்துவத்திற்கும் ஏற்ற வகையில் நாணம் உண்டு. படைப்பினங்களின் நாணத்திற்கு அது ஒப்பாகாது. அல்லாஹ்வுக்கு விரும்புதல் எனும் பண்பு இருக்கிறது என்பது இந்நபிமொழியிலிருந்து நிரூபணமாகிறது.

ஒரு முஸ்லிம் குளிக்கும்போதும் மலஜலம் கழிக்கும் போதும் மறைத்துக் கொள்வது அவசியமாகும். வெட்கமும் மானத்தை மறைத்துக் கொள்வதும் நம்பிக்கையாளர்களின் பண்புகளில் உள்ளதாகும். வெட்கம் ஈமானின் ஓர் அம்சம். வெட்கம் முழுவதும் நன்மையாகும். ஒரு ஹதீஸில் வந்துள்ளது: அன்ஸாரிப் பெண்ணொருத்தி, 'அல்லாஹ்வின் தூதரே! அல்லாஹ் சத்தியத்தைச் சொல்வதற்கு வெட்கப்படுவதில்லை...' என்று கூறினாள். அல்லாஹ்வுக்கு அவனுடைய மகத்துவத்திற்கு ஏற்ற வகையில் வெட்கம் உள்ளது என்பது ஹதீஸிலிருந்து விளங்க முடிகிறது.

57. " திண்ணமாக அல்லாஹ் மிகவும் வெட்கப்படுபவன்; வாரி வழங்குபவன்! ஒரு மனிதன் அவனிடம் கையேந்தும்

போது அவனை வெறுங்கையோடு திருப்பி அனுப்ப வெட்கப் படுகிறான்” என அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர்: ஸல்மான் ஃபாரிஸி (ரலி),
நூல்: திர்மிதி-3556, அபூதாவூத்-1488,
இப்னுமாஜா-3865,ஸஹீஹுல் ஜாமிஃ-1757

**இந்நபிமொழியில்:**

அல்லாஹ்வின் மகத்துவத்திற்கு ஏற்ற விதத்தில் நாண முறுதல் மற்றும் வாரி வழங்குதல் ஆகிய இரண்டு பண்களும் அல்லாஹ்வுக்கு இருப்பதாக நிரூபணமாகிறது. உண்மையில் அல்லாஹ் வெட்கப்படுகிறான். ஆனால் மனிதர்கள் வெட்கப் படுவதுபோல் அல்ல. ஏனெனில் அல்லாஹ்வின் பண்புகள் நம்முடைய பண்புகளைப்போல் இருக்காது. பிரார்த்தனையின் ஒழுங்குமுறைகளில் கைகளை ஏந்துவதும் ஒன்றாகும். பிரார்த்தனைக்கு பாக்கியம் இருக்கிறது. பிரார்த்தனையின் நன்மை எல்லோருக்கும் பொதுவானது. அல்லாஹ்வின் அருளில் மனிதன் நம்பிக்கை இழந்துவிடக்கூடாது. அல்லாஹ் வினுடைய வள்ளல் குணம் விசாலமனது. அதனுடைய நன்மை எல்லோருக்கும் பொதுவானதாகும்.

58. அனஸ் (ரலி) அறிவிப்பதாவது: ஒரு முறை நபி (ஸல்) அவர்கள் காலத்தில் விலைவாசி உயர்ந்து விட்டது! ‘அல்லாஹ்வின் தூதரே! தாங்கள் விலைவாசியைக் கட்டுப் படுத்தக் கூடாதா?’ என்று மக்கள் கேட்டார்கள். அதற்கு நபி (ஸல்) அவர்கள், “அல்லாஹ்வே படைப்பாளன், குறைவாகவும் வழங்குபவன், தாராளமாகவும் தருபவன், உணவளிப்பவன், விலைவாசியை உயர்த்தவோ குறைக்கவோ செய்பவன். எவரது உயிருக்கும் உடைமைக்கும் நான் அநீதம் செய்து, பிறகு ‘எனக்கு இவர் அநீதியிழைத்துவிட்டார்’ என்று என்னை

யாரும் குற்றம் சொல்லாத நிலையில் நான் அல்லாஹ்வை சந்திக்கவே விரும்புகிறேன்” எனக் கூறினார்கள்.

நூல்: அஹ்மத், திர்மிதி-1314, அபூதாவூத்-3451, இப்னு மாஜா-3200, ஸஹீஹுல் ஜாமிஃ-1846

**இந்நபிமொழியில்:**

இங்கு கூறப்பட்ட தன்மைகள் அல்லாஹ்வுக்கு அவனது மகத்துவத்திற்கு ஏற்ற விதத்தில் உள்ளன என்பது நிரூபணம். இத்தன்மைகளை நபி (ஸல்) அவர்கள் அல்லாஹ்வுக்கு எவ்வாறு கொடுத்துள்ளார்களோ அவ்வாறே நாமும் கொடுக்க வேண்டும். ஏனெனில் அவர்கள் தாம் படைப்பினங்களில் தம் இறைவனை அதிகம் அறிந்தவர்கள். அநியாயம் செய்வது பற்றி எச்சரிக்கப்பட்டுள்ளது. மனிதர்களின் உடைமைகள், சொத்துக்களுக்குப் பாதிப்பை ஏற்படுத்தக்கூடாது. வியாபாரி களின் விலையும் லாபமும் மிகப் பெரிய மோசடியாக இல்லாமல் மக்களுக்கு அறிமுகமானதாக இருக்கும்போது அவர்களுக்கு நெருக்கடி தருவதிலிருந்து விலகியிருக்க வேண்டும். நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் பரிபூரணமான இறையச்சமும், தம் இறைவனுக்கு அவர்கள் அஞ்சி யிருப்பதும், அவர்களின் நீதியும் இந்நபிமொழியில் சுட்டிக் காட்டப்பட்டுள்ளது.

59. ஹானிஉ பின் எஸீத்(ரலி) அறிவிப்பதாவது: இவர் தமது கூட்டாத்தாருடன் நபி (ஸல்) அவர்களிடம் வந்தபோது அந்த மக்கள் ஹானியை ‘அபுல் ஹகம்’ (தீர்ப்பு வழங்குபவரின் தந்தை) என்றழைப்பதை நபி (ஸல்) அவர்கள் செவியுற்றனர். உடனே நபி (ஸல்) அவர்கள் ஹானிஉ பின் எஸீத் (ரலி) யை அழைத்து, “உண்மயில் அல்லாஹ் தான் ‘ஹகம்’ (தீர்ப்பு

வழங்குபவன்), அவனிடம் தான் தீர்ப்பு உள்ளது. அவ்வாறிருக்க நீர் ஏன் 'அபுல் ஹகம்' என்றழைக்கப்படுகிறீர்?" என வினவினார்கள். அதற்கு ஹானி அவர்கள்,'எனது கூட்டத்தினர் ஏதாவது ஒரு விஷயத்தில் கருத்து வேறுபாடு கொண்டால் என்னிடம் வருவார்கள். நான் அவர்களுக்கிடையே தீர்ப்பு வழங்குவேன். அதை இரு தரப்பாரும் பொருந்திக் கொள்வர்' எனக் கூறினார்கள். அதற்கு நபி (ஸல்) அவர்கள், "ஆகா! இது என்னே அற்புதம்! உமக்குக் குழந்தை இருக்கிறதா?" என்று கேட்டார்கள். ஹானி, 'எனக்கு ஷுரைஹ், முஸ்லிம், அப்துல்லாஹ் என (மூன்று) குழந்தைகள் உள்ளன' என்றார். "அவர்களில் யார் மூத்தவர்?" என நபி (ஸல்) கேட்டார்கள். அதற்கு ஹானி, 'ஷுரைஹ்' என்றார். "அப்படியானால் நீர் அபூஷுரைஹ்" (ஷுரைஹின் தந்தை) என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். (அபூதாவூத்-4955, நஸயீ, இர்வா.:.-615)

**இந்நபிமொழியில்:**

தீர்ப்பு வழங்குதல் எனும் தன்மை அல்லாஹ்வுக்கு இருக்கிறது என நிரூபணமாகின்றது. அவன் தீர்ப்பு வழங்குபவர்களில் மிகச் சிறந்தவன்."உறுதியாக நம்புகிற மக்களுக்கு அல்லாஹ்வை விட அழகிய தீர்ப்பு வழங்குபவன் யார்?"(5:50)

அல்லாஹ் தீர்ப்பு வழங்குபவனும், அவனது சொல்லிலும், செயலிலும் அவன் விதித்த விதிகளிலும் நீதியாளனும் ஆவான். தீர்ப்பு அவனிடமே உள்ளது. காரியங்கள் யாவும் அவனிடமே திரும்புகின்றன. பிரச்சனைகளின் முடிவு அவனிடம் உள்ளது. மறுமை நாளில் அவனே மக்களிடையே தீர்ப்பு வழங்குவான். அநீதியிழைக்கப்பட்டவனுக்கு அநீதியிழைத்தவனிடமிருந்து நியாயம் வழங்குவான். யாருக்கும் அநீதி இழைக்காமல், எவரது நன்மையையும் பறித்து விடமால்

மக்களிடம் விசாரணை நடத்துவான். அவனது வார்த்தைகள் உண்மையானவை. அவனுடைய சட்டங்கள் நீதிமிக்கவை. "உமது இறைவனின் வார்த்தை உண்மையாலும் நீதியாலும் முழுமை பெற்றுள்ளது" (6:115)

ஒரு நபிமொழியில் இவ்வாறு வந்துள்ளது: "உனது உதவி கொண்டே (எதிரிகளுடன்) வழக்காடினேன். உன்னிடமே தீர்ப்புக்காக முறையிட்டேன்." (புகாரி-1120, முஸ்லிம்-769) தீர்ப்பு வழங்குபவன் (அல்லாஹ்) தூய்மையானவன்! அவனுடைய தீர்ப்பை மறுபரிசீலனை செய்பவர் யாருமில்லை! அவன் யாவற்றையும் செவியுறுபவன்! நன்கு அறிபவன்!

60. "(நியாயத்) தராசு ரஹ்மானின் கையில் இருக்கிறது. (அதன் மூலம்) மறுமை நாள் வரை சிலரை உயர்த்துகிறான், சிலரைத் தாழ்த்துகிறான்" என நபி (ஸல்) கூறினார்கள்.

அ: நவாஸ் பின் ஸம்ஆன் (ரலி), (இப்னுமாஜா-199)

(இதன் அறிவிப்புத் தொடர் ஸஹீஹானது என ஸவாயிதில் இப்னுமாஜா அவர்கள் குறிப்பிட்டுள்ளார்கள்.)

**இந்நபிமொழியில்:**

(நன்மை தீமைகளை நிறுக்கும்) தராசு உண்டு என்பதும், திருக்குர்ஆன் மற்றும் நபிமொழியில் கூறப்பட்டுள்ளவாறு அல்லாஹ்வுக்கு கை இருக்கிறது என்பதும் நிரூபணமாகிறது. ஆனால் அல்லாஹ்வின் கை மனிதனின் கைக்கு ஒப்பாகாது. பொய், அவதூறு சொல்வோரின் கூற்றை விட்டும் அல்லாஹ் தூய்மையானவன். உயர்வும், தாழ்வும் அல்லாஹ்வின் புறத் திலிருந்து ஏற்படுகிறது. உண்மையில் யாரை அல்லாஹ் உயர்த்தி, கண்ணியம் அளித்திருக்கிறானோ அவனே உயர்ந் தவன்! மக்கள் அவனைப் புறக்கணித்தாலும் சரி. யாரை

அல்லாஹ் தாழ்த்தி, அவனது மரியாதையைக் குலைத்து விட்டானோ அவன் தான் தாழ்ந்தவன்! மக்கள் அவனைக் கொண்டாடினாலும் சரியே!

61. நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: "அல்லாஹ்வின் வலது கை நிரம்பி இருக்கிறது. வாரி வழங்குவதால் அது வற்றிவிடாது. இரவிலும் பகலிலும் அவன் அள்ளித் தருபவன். நீங்கள் சிந்தித்துப் பார்த்ததுண்டா? வானங்கள் மற்றும் பூமியைப் படைத்த நாள் முதல் அவன் வாரிக் கொடுத்தது அவனது வலது கையிலுள்ளதை வற்றச் செய்துவிட வில்லை. (வானம், பூமியை அவன் படைப்பதற்கு முன்) அவனுடைய அர்ஷ் தண்ணீரில் இருந்தது. அவனுடைய மற்றொரு கையில் குறைத்துத் தரும் தன்மை இருக்கிறது. (எனவே) அவன் (ரிஸ்கை) உயர்த்தவும் செய்வான் குறைக்கவும் செய்வான்."

அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரலி), (புகாரி-7419, முஸ்லிம்-993)

**இந்நபிமொழியில்:**

அல்லாஹ்வுக்கு அவனது மகத்துவத்திற்கு ஏற்ற விதத்தில் இரண்டு கைகள் இருக்கின்றன என்பது நிரூபணமாகின்றது. அவற்றை இன்ன விதத்தில் என்று விவரித்துக் கூறவோ, உதாரணம் கூறவோ, ஒப்பாக்கவோ, மறுக்கவோ கூடாது. அவ்விரண்டு கைகளும் நன்மையிலும் நற்பாக்கியத்திலும் வலதுகையாகத் திகழ்கின்றன. அல்லாஹ்வுடைய விசாலமான ஈகைக் குணமும் மகத்தான வள்ளல் குணமும் இங்கு சுட்டிக் காட்டப்பட்டுள்ளது. அவனது கருவூலம் நன்மையால் நிரம்பி இருக்கிறது; அது காலியாகிவிடாது.

அல்லாஹ்வுக்கு அர்ஷ் இருப்பது நிரூபணம். (ஆரம்பத்தில்) அது தண்ணீரில் இருந்தது. செயல்கள், அந்தஸ்துகள்,

நன்மை, தீமைகள் யாவற்றையும் நிறுக்கக்கூடிய தராசு அவனிடம் உண்டு. அவன் மனிதர்கள், சமுதாயங்கள் மற்றும் செயல்களில் தான் நாடியவற்றை உயர்த்துகிறான். தான் நாடியவற்றைத் தாழ்த்துகிறான். குறைத்தல், தாழ்த்தல், உயர்த்தல் ஆகியவை அவன் செயல்களில் உள்ளவை யாகும். அவை அவனது மகத்துவத்திற்கு ஏற்ற வகையில் இருக்கும். “அல்லாஹ் குறைவாகவும் வழங்குகிறான், தாராளமாகவும் வழங்குகிறான். அவனிடமே திரும்பக் கொண்டு வரப்படுவீர்கள்.” (2:245)

62. நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: “நரகில் போடப்பட வேண்டியவை போடப்பட்டுக் கொண்டேயிருக்கும். நரகமோ இன்னும் இருக்கிறதா? இன்னும் இருக்கிறதா? என்று கேட்டுக் கொண்டே இருக்கும். இறுதியில் அகில உலகின் அதிபதி தனது பாதத்தை அதில் வைப்பான். அவை ஒன்றோடொன்று சேர்ந்து ‘உனது கண்ணியம் மற்றும் ஈகை மீது சத்தியமாக! போதும், போதும்’ எனக் கூறும். ஆனால் சொர்க்கத்தில் இடங்கள் காலியாகவே இருக்கும். அவற்றுக்காக அல்லாஹ் மனிதர்களை உருவாக்கி அந்தக் காலி இடங்களில் தங்க வைப்பான்.” அறிவிப்பவர்: அனஸ் (ரலி),

நூல்: புகாரி-7384, முஸ்லிம்-2848

**இந்நபிமொழியில்:**

அல்லாஹ்வுக்கு பாதம் இருக்கிறதென நிரூபணமாகிறது. அது அவனது மகத்துவத்திற்கு ஏற்ற விதத்தில் இருக்கும். படைப்பினங்களின் பாதங்களுக்கு அது ஒப்பாகாது. “அவனைப் போல் எதுவும் இல்லை. அவன் செவியுறுபவன், பார்ப்பவன்.” (42:11)

இந்நபிமொழியில் அல்லாஹ்வினுடைய மகத்துவம் மற்றும் அடக்கியாளும் தன்மை சுட்டிக்காட்டப்பட்டுள்ளது. அவனுடைய பிடி கடுமையாக இருக்கும். அல்லாஹ்வின் அனுமதியுடன் நரகம் பேசும். அல்லாஹ்வின் கருணை அவனுடைய கோபத்தை மிஞ்சி இருக்கிறது. எந்த அளவுக்கு எனில் நரகில் அதிகப்படுத்தப்படுவதை நிறுத்திவிடுவான். சொர்க்கத்திலுள்ள அதிகப்படியான இடங்களுக்கு வேறு மனிதர்களை உருவாக்குவான். நரகத்தின் பயங்கரம் இதில் சுட்டிக்காட்டப்பட்டுள்ளது. (அதிலிருந்து அல்லாஹ் நம்மைக் காப்பானாக!)

அல்லாஹ்வின் பெயர்கள், தன்மைகள் மற்றும் மறைவான விஷயங்கள் பற்றிய நபிமொழிகளை நபித்தோழர்கள் செவி யேற்று, அவற்றை நம்பி, ஏற்றுக் கொண்டார்கள்; அவற்றை மெய்ப்படுத்தினார்கள். நபிமொழிகளில் வந்துள்ளதுபோலவே அவற்றைக் கையாண்டார்கள். அவற்றை ஒப்பாக்காமல், இன்ன விதத்தில் என்று விவரிக்காமல், உதாரணம் கூறாமல், மறுக்காமல் அப்படியே அல்லாஹ்வுக்குக் கொடுத்தார்கள்.

63. “உங்களில் யாராயினும் அவருடைய இறைவன் அவரிடம் பேசத்தான் போகிறான். அவருக்கும் அவருடைய இறைவனுக்கும் இடையில் மொழிபெயர்ப்பாளர் யாரும் இருக்க மாட்டார். அப்போது அவர் தனது வலது பக்கம் பார்ப்பார்; தான் செய்த செயல்களைத் தவிர வேறு எதையும் (அங்கு) காண மாட்டார். தனது இடது பக்கம் பார்ப்பார்; தான் செய்த செயல்களைத் தவிர எதையும் (அங்கு) காண மாட்டார். தனக்கு முன்னால் பார்ப்பார்; (அங்கே) தனக்கு நேராக நரகத்தைத் தவிர வேறு எதையும் காண மாட்டார். எனவே பாதி ஈத்தம் பழம் அளவுக்கேனும் தர்மம் செய்து

நரகிலிருந்து (உங்களைக்) காத்துக் கொள்ளுங்கள் என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். (புகாரி-1016, முஸ்லிம்-7512)

அறிவிப்பவர்: அதீ பின் ஹாதிம் (ரலி),

**இந்நபிமொழியில்:**

அல்லாஹ்வுக்கு அவனது மகத்துவத்திற்கு ஏற்ற விதத்தில் பேச்சு இருக்கிறது என்பது நிரூபணமாகின்றது. மறுமையில் மொழிபெயர்ப்பாளர் யாருமின்றி தன் அடியாரிடம் அவன் பேசுவான். மறுமையில் விசாரணையின்போது அடியானுக்கு முன்னால் நரகம் எடுத்துக் காட்டப்படும். நரக வேதனையை விட்டும் தடுப்பதில் மிக முக்கியமானது தர்மம் ஆகும். தர்மம் நரகத்தை விட்டும் பாதுகாக்கக்கூடியது. மனிதன் எந்த நன்மையையும் அற்பமாகக் கருதக் கூடாது. உண்மையில் நற்செயல்கள் ஈடேற்றத்திற்குக் காரணமாக இருக்கின்றன. ஆம்! அங்கு நற்செயல்களைத் தவிர வேறெதுவும் பலன் தராது. "(இது) மிகைத்தவனும் ஞானமிக்கோனுமாகிய அல்லாஹ்விடமிருந்து அருளப்பட்ட வேதமாகும்" (45:2)

64. 'அல்லாஹ்வின் தூதரே! லைலதுல் கத்ர் இரவை நான் அடைந்தால் எதைப் பிரார்த்திப்பது?' என (நபி (ஸல்) அவர்களிடம்) நான் கேட்டேன். அதற்கு நபி (ஸல்) அவர்கள், "அல்லாஹும்ம இன்னக அஃபுவ்வுன் துஹிப்புல் அஃப்வ ஃபஅஃபு அன்னீ என்று கூறு எனக் கூறினர்கள்.

اَللّٰهُمَّ إِنَّكَ عَفُوٌّ تُحِبُّ الْعَفْوَ فَاعْفُ عَنِّي

(பொருள்: இறைவா! நீ மன்னிப்பவன்! மன்னிப்பதை விரும்புபவன்! என்னை மன்னிப்பாயாக!)

அறிவிப்பவர்: ஆயிஷா (ரலி)

நூல்: அஹ்மத், இப்னு மாஜா-3850,

அஸ்ஸஹீஹா-அல்பானி

**இந்நபிமொழியில்:**

அல்லாஹ்வுக்கு அவனது மகத்துவத்திற்கு ஏற்ற விதத்தில் மன்னிக்கும் தன்மையும் விரும்புகின்ற குணமும் உண்டு என்பது நிரூபணமாகிறது. மக்களை மன்னிப்பவர்களை அவன் விரும்புகிறான். அல்லாஹ் விரும்புகின்ற குணங்களை அடியான் மேற்கொள்வது அவசியமாகும். செயல்களைப் பொறுத்தே கூலியும் இருக்கும். மக்களை மன்னிக்கிறவனை அல்லாஹ் மன்னிப்பான். அடியான் தன் இறைவனின் மன்னிப்பை ஆதரவு வைக்க வேண்டும். தனது பாவங்களை மன்னித்து பிழைகளை பொருத்தருள அவனிடம் இறைஞ்ச வேண்டும்.

65. “மறுமையில் இறைவன் முஃமின்களுக்கு சிரித்தவாறு காட்சி தருவான்” என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

(முஸ்லிம்-191)

**இந்நபிமொழியில்:**

மறுமையில் காட்சி தரும் தன்மை அல்லாஹ்வுக்கு உண்டு. அது அவனுடைய மகத்துவத்திற்கு ஏற்ற விதத்தில் என்பது நிரூபணமாகிறது. ஸஹீஹான ஹதீஸில் வந்துள்ளது போல் சிரிக்கும் பண்பும் அல்லாஹ்வுக்கு உண்டு என்பதும் நிரூபணம். அவன் சிரிப்பது அவனது நேசர்களை அவன் கண்ணியப்படுத்துவதற்குச் சான்றாகும். அல்லாஹ் தனது நேசர்களுக்குக் காட்சி தரும்போது சிரிப்பான். தன்னுடைய பகைவர்களை விட்டும் தன்னை மறைத்துக் கொள்வான். அவர்களால் அவனைக் காண முடியாது.

66. “இரு மனிதர்களைப் பார்த்து அல்லாஹ் சிரிக்கிறான். அவ்விருவரில் ஒருவர் மற்றொருவரைக் கொலை செய்தார். அவ்விருவருமே சொர்க்கத்தில் இருக்கிறார்கள்” என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர்: அபூஹுரைரா(ரலி), நூல்: புகாரி-2826, முஸ்லிம்-1890, இப்னுமாஜா-191, நஸயீ, அஹ்மத்

**இந்நபிமொழியில்:**

சிரிக்கும் பண்பு அல்லாஹ்வுக்கு இருக்கிறது என்பது நிரூபணம். இது அதன் வெளிப்படையான அர்த்தத்திலும் அவனது மகத்துவத்திற்கு ஏற்ற விதத்தில் ஆகும். ஏனெனில் அவனது பெயர்கள் (குறைகளை விட்டும்) பரிசுத்தமானவை! அவனது அருட்கொடைகள் மகத்தானவை! நபித்தோழர்கள் இவற்றை நம்பி ஏற்றுக் கொண்டனர். குர்ஆன், ஹதீஸில் வந்துள்ளது போலவே இவற்றை கையாண்டனர். அவற்றில் அவர்கள் தடுமாறவில்லை; அது பற்றி அவர்கள் யாரிடமும் கேட்கவில்லை; அவற்றிற்கு எந்த வியாக்கியானமும் கூறவில்லை. இந்தச் சிரிப்பு மனிதர்களின் சிரிப்பைப்போல் அல்ல. அதை விட்டும் அல்லாஹ் உயர்ந்தவன். “அவனைப் போல் எதுவுமில்லை. அவன் (யாவற்றையும்) செவியேற்பவன், பார்ப்பவன்!” (42:11)

அல்லாஹ்வுடைய விசாலமான கருணையும் தவ்பா செய்பவர்களின் தவ்பாவை அவன் ஏற்றுக் கொள்வதும் இங்கு சுட்டிக்காட்டப்பட்டுள்ளது. கொலைக் குற்றம் புரிந்தவன் தவ்பா செய்துவிட்டு நன்னடத்தையை மேற்கொண்டால் அவனது தவ்பாவை அல்லாஹ் ஏற்று அவனை மன்னிப்பான். மேலும் அவனை சொர்க்கத்தில் நுழைவிப்பான்.

67. “சில மக்கள் சங்லிகளால் பிணைக்கபட்டு சொர்க் கத்திற்கு இழுத்துச் செல்லப்படுவதைப் பார்த்து அல்லாஹ் வியப்படைகிறான்” என நபி (ஸல்) அவர்கள் கூறியதாக அபூஹுரைரா (ரலி) அறிவிக்கிறார்கள்.

நூல்: புகாரி-3010, அபூதாவூத்-2677, அஹ்மத்

**இந்நபிமொழியில்:**

வியப்படையும் தன்மை அல்லாஹ்வுக்கு இருப்பது நிரூபணமாகின்றது. அது அவனுடைய மகத்துவத்திற்கு ஏற்ற விதத்திலாகும். இத்தன்மை மனிதர்கள் வியப்படையும் தன்மைக்கு ஒத்ததாக இருக்காது. “அவனைப் போல் எதுவுமில்லை. அவன் செவியேற்பவன், பார்ப்பவன்!” (42:11)

உண்மையில் மனிதன் அவனுடைய பார்க்கும் திறன் குறைபாடுடையதாக இருப்பதால் சில போது நல்லதைத் தேர்வு செய்வதில்லை. எந்த அளவுக்கு எனில் அதனை இன்னொருவன் அவனுக்கு வழி காட்ட வேண்டியிருக்கிறது. மனிதன் சில சமயம் சத்தியத்தை ஏற்றுக் கொள்வதற்கும் அசத்தியத்திலிருந்து விலகிக் கொள்வதற்கும் தனக்கு யார் முயற்சி செய்கிறாரோ அவரிடமிருந்து பயன் பெறுகிறான். அவருக்கு அவன் துன்பம் தந்தாலும் சரியே! உள்ளம் தீமையை அதிகம் தூண்டக்கூடியதாக இருக்கின்றது. நல்ல நண்பன், நலம் நாடக்கூடிய தோழர் மற்றும் நன்மைக்கு உதவுபவனுடைய சிறப்பு இங்கு சுட்டிக்காட்டப்பட்டுள்ளது. “ நன்மையான காரியத்திலும் இறைச்சமுள்ள காரியத்திலும் ஒருவருக்கொருவர் உதவியாக இருங்கள். பாவத்துக்கும் வரம்புமீறலுக்கும் ஒருவருக்கொருவர் உதவாதீர்கள் ” (5:2)

சிலர் நன்மை செய்வதற்கு மற்றவர்களால் நிர்ப்பந்திக்கப் படுகிறார்கள். பிறகு அவர்களுடைய உள்ளம் (அதற்குப்) பணிந்து (அதை ஏற்றுக்கொள்வதற்கு) இலகுவாகிவிடுகிறது. சொர்க்கம் துன்பங்களால் சூழப்பட்டுள்ளது. ஆரம்பத்தில் நற்செயல் சிலவேளை உள்ளத்திற்கு கஷ்டமாகத்தான் இருக்கும். ஒரு முஸ்லிம் அல்லாஹ்வின் அடியார்களை நரகிலிருந்து காப்பாற்றுவதற்காக சத்தியத்தை ஏற்பதற்கு அவர்களை நிர்ப்பந்திக்க வேண்டும். மக்கள் தீமையைத் தேர்வு செய்யும்போது அவர்கள் இஷ்டத்திற்கு விடப்பட மாட்டார்கள். இந்த நபிமொழியில் இந்தச் சமுதாயத்தின் சிறப்பு உணர்த்தப்பட்டுள்ளது. அவர்கள் ஒருவரை ஒருவர் சுவர்க்கத்திற்கு இழுத்துச் செல்வார்கள்.

68. ஒரு மனிதர் நபி (ஸல்) அவர்களிடம் வந்து, ‘நீங்கள் குறைஷிகளின் தலைவரா?’ என்று கேட்டார். அதற்கு நபி(ஸல்) அவர்கள், “தலைவன் அல்லாஹ் தான்” என்றார்கள். பிறகு அவர், “(அப்படியானால்) நீங்கள் சொல்லால் அவர்களில் சிறந்தவர்கள். அந்தஸ்தால் அவர்களில் உயர்ந்தவர்கள்” என்றார். அதற்கு நபி (ஸல்) அவர்கள், “உங்களில் ஒருவர் (என்னைப் பற்றி) இவர் சொன்னதைச் சொல்லட்டும். ஷைத்தான் அவரை மிகைத்து விட வேண்டாம்” என்று கூறினார்கள். (அஹ்மத், ஸஹீஹுல் ஜாமிஃ-3700,)

இதே கருத்தில் அமைந்த மற்றொரு ஹதீஸ் அபூதாவூதில் (4806) இடம் பெற்றுள்ளது.

அறிவிப்பவர்: அப்துல்லாஹ் பின் ஷிக்கீர் (ரலி)

**இந்நபிமொழியில்:**

ஸையித்- தலைவர் எனும் வார்த்தை அல்லாஹ்வுக்குச் சொல்லப்படும். எவனுடைய சிறப்பும் மேன்மையும் பரிபூரண

மடைந்து விட்டதோ எவனுடைய அருள் முழுமை பெற்று, கருணை எல்லோருக்கும் பொதுவாகிவிட்டதோ,மக்களுடைய உள்ளங்களில் எவனைப் பற்றிய பயம் அதிகரித்து விட்டதோ அவனே தலைவன் ஆவான். அல்லாஹ்வுடைய தலைமைத் தகுதி மனிதனுடைய தலைமைத் தகுதியைப் போல் அல்லாமல் அவனுடைய மகத்துவத்திற்கு ஏற்ற விதத்தில் இருக்கும். ஏனெனில் மனிதனுடைய தலைமைத் தகுதி குறையுள்ளதாகும்.

69. “அல்லாஹ் தான் மேகத்தை உற்பத்தி செய்கிறான். அது அழகாகப் பேசும்; அழகாகச் சிரிக்கும்” என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். (அஹ்மத், ஸஹீஹுல் ஜாமிஃ-1920)

**இந்நபிமொழியில்:**

இதுபோன்ற நபிமொழிகளை- அவை எவ்வாறு வந்துள்ளனவோ அவ்வாறே நாம் கையாள வேண்டும். அந்நபி மொழிகளை உண்மைப்படுத்தியவர்களாய், அந்நபிமொழிகள் எந்தக் கருத்தைச் சொல்கின்றனவோ அதனை எவ்வித ஊகத்திற்கும், கற்பனைக்கும் மற்றும் சந்தேகத்திற்கும் இடம் தராமல் நம்பியவர்களாய்க் கையாள வேண்டும். மேகத்தை உருவாக்குவதும், அந்த மேகம் பேசுவதும், சிரிப்பதும் அதனை முன்மாதிரியின்றிப் படைத்து, உருவாக்குபவனின் ஆற்றலுக்கும் அவனது நுண்ணறிவின் பூரணத்துவத்திற்கும் சான்றாகும். சிலர், இடியை மேகத்தின் பேச்சாகவும், மின்னலை மேகத்தின் சிரிப்பாகவும் கருதுகிறார்கள்.

அல்லாஹ் கூறுகிறான்: “பளுவான மேகத்தையும் அவன் உருவாக்குகிறான். இடியும் அவனைப் புகழ்ந்து போற்றுகிறது. அவனைப் பற்றிய அச்சத்தினால் வானவர்களும் (புகழ்ந்து போற்றுகின்றனர்). இடி முழக்கங்களையும் அவனே அனுப்பு

கிறான். தான் நாடுகின்றவர்களை அவற்றின் மூலம் தண்டிக்கிறான். அவர்களோ அல்லாஹ்வைப் பற்றி தர்க்கம் செய்கின்றனர். அவன் வலிமை மிக்கவன்." (13:12,13)

70. "அல்லாஹ்விடம் ஏதேனும் ஒப்படைக்கப்பட்டால் அதனை அவன் பாதுகாப்பான்" என பேரறிஞர் லுக்மான் கூறு வார்கள் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர்: இப்னு உமர்(ரலி), நூல்: அஹ்மத், ஸஹீஹுல் ஜாமிஃ-1708

**இந்நபிமொழியில்:**

அல்லாஹ்வின் செயல்களில் பாதுகாத்தலும் ஒன்று. அவன், ஒவ்வொரு மனிதனும் செய்ததைப் பாதுகாப்பவன் ஆவான். மனிதன் தனது தீனையும், அமானிதங்களையும் செயல்களின் முடிவுகளையும் தன் இறைவனிடம் ஒப்படைத்து விட வேண்டும். ஆதாரப்பூர்வமான ஹதீஸில் வந்துள்ளது போல, பயணம் செல்பவர் விடைபெறும்போது "உம்முடைய தீனையும், அடைக்கலப் பொருட்களையும், பொறுப்புகளையும் செயல்களின் முடிவுகளையும் அல்லாஹ்விடம் ஒப்படைக் கிறேன்" என்று நாம் அவரிடம் கூறவேண்டும். அல்லாஹ் வுடைய அறிவு மற்றும் ஞானத்தின் பரிபூரணத்துவம் இதில் சுட்டிக் காட்டப்பட்டுள்ளது. திண்ணமாக அவனிடம் எந்தப் பொருளும் மறைந்ததல்ல. அல்லாஹ் கூறுகிறான்: "(நபியே!) நீர் உரக்கச் சொன்னாலும் இரகசியத்தையும் (அதை விட) மறைவானவற்றையும் அவன் அறிகிறான்." (20:7)

71. "மிகைத்தல் அவனுடைய கீழாடை! பெருமை அவனது மேலாடை!" அல்லாஹ் கூறுகிறான்: "இதில் யாரேனும் என்னுடன் போட்டிக்கு வந்தால் அவனை நான் வேதனை செய்வேன்" என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். (முஸ்லிம்)

அறிவிப்பவர்: அபூஸயீத்(ரலி), அபூஹுரைரா(ரலி),

**இந்நபிமொழியில்:**

எல்லாவற்றிலும் மிகைத்தலும் எல்லாப் பெருமையும் அல்லாஹ்வுக்குரியது என நிரூபணமாகின்றது. பொதுவாக மிகைத்தலும் பெருமையும் அல்லாஹ்வுக்குரியதாகும். இவ்விரு தன்மைகளில் மனிதன் தன் இறைவனுடன் போட்டி போடுவது ஹராமாகும். ஏனெனில் இவ்விரு பண்புகளும் அவனுக்கு மட்டுமே உரியன. மேலும் இவ்விரண்டின் மூலம் அவன் தனித்துவம் பெற்றுள்ளான்.

அவனுடைய படைத்துப் பரிபாலிக்கும் தன்மை, இறைத் தன்மை மற்றும் அடக்கியாளும் தன்மையின் தேட்டம் இது தான்: "அவன் யாவற்றையும் மிகைத்தவனாக இருக்க வேண்டும். அவன் எவராலும் மிகைக்கப்படக்கூடாது. அவன் பெருமைக்குரியவனாக இருக்க வேண்டும். அவனை யாரும் மிஞ்சிவிடக் கூடாது." இவ்விரு பண்புகளையோ அல்லது இவ்விரண்டில் ஒன்றையோ மனிதன் தனதாக்கிக் கொண்டால் இறைத்தன்மையில் தன்னுடைய இறைவனுடன் போட்டி போட்டவனாவான். தன் இறைவனின் மகத்துவத்தில் இணை கற்பித்தவனாவான்.

ஆகவே மனிதன் தன் இறைவனுக்குத் தாழ்வதையும் தன் எஜமானுக்குப் பணிவதையும் மேற்கொள்வது கடமை யாகும். இந்த அடிமைத்தனத்தைத்தான் தன் அடியார்களிடம் அல்லாஹ் எதிர்பார்க்கிறான். இதைத்தான் அவர்கள் மீது கடமையாக்கி இருக்கின்றான். பெருமையடிப்பவர்களுக்கும் அடக்கியாள்பவர்களுக்கும் இந்நபிமொழியில் உறுதியான எச்சரிக்கையும் கடுமையான கண்டனமும் இருக்கிறது.

72. “தான் செவியுறும் துன்பத்தை மிகவும் பொறுத்துக் கொள்பவன் அல்லாஹ்வை விட வேறு யாரும் கிடையாது. அவர்கள் அவனுக்கு இணை கற்பிக்கின்றனர்; அவனுக்கு சந்ததியை ஏற்படுத்துகின்றனர். அப்படியிருந்தும் அவர்களுக்கு அவன் உணவளிக்கின்றான், அவர்களை மன்னிக்கின்றான், அவர்களுக்கு (தேவையானதை)க் கொடுக்கின்றான்” என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர்: அபூமூஸா (ரலி), புகாரி-7378, முஸ்லிம்-2804

**இந்நபிமொழியில்:**

அல்லாஹ் துன்பத்தைப் பொறுத்துக் கொள்கின்றான். இது படைப்பினங்களின் பொறுமைக்கு ஒப்பாகாத விதத்தில் அவனுடைய மகத்துவத்திற்கு ஏற்ற வகையிலாகும். தனது அடியார்கள் மீது அவன் கொண்டிருக்கும் மிகப் பெரும் பொறுமை இதில் கூறப்பட்டுள்ளது. அவ்வாறிருந்தும் அவன் சக்திமிக்கவன்! கடுமையாகத் தண்டிப்பவன்! ஆயினும் அவன் கருணை அவனது கோபத்தையும் மிகைத் திருக்கிறது. மிகப் பெரும் பாவம் அல்லாஹ்வுக்கு இணைவைப்பதும், அவனுக்கு மனைவி, சந்ததியைக் கற்பிப்பதும் ஆகும்.

ஒரு கா∴பிர் அல்லாஹ்வை நிராகரித்தும் கூட அவனுக்கு அல்லாஹ் ரிஸ்க்- வாழ்வாதாரம் அளிக்கின்றான். அவனை மன்னிக்கின்றான். அவன் செய்த பாவங்களுக்கு மறுமையில் முழுமையான கூலியை வழங்கும் வரை அவனைத் (தண்டிக்காமல்) விட்டு விடுகின்றான். இந்த ஹதீஸில் அடியார்களின் பேச்சுக்களை அல்லாஹ் செவியேற்பது நிரூபணமாகின்றது. அதற்கு ஒப்பு, உவமை கிடையாது. “அவனைப் போல் எதுவும் இல்லை. அவன் யாவற்றையும் செவியேற்பவன் பார்ப்பவன்.” (42:11)

## அல்லாஹ்வுக்குக் கொடுக்கக் கூடாத தன்மைகள்

73. "அல்லாஹ்வுக்கு இணை கிடையாது" என நபி(ஸல்) கூறினார்கள். (அபூதாவூத்-3933, ஸஹீஹுல் ஜாமிஃ-5423)

அறிவிப்பவர்: உஸாமா பின் உமைர் (ரலி),

**இந்நபிமொழியில்:**

இந்தச் சொற்றொடர் வேதங்களும் தூதர்களும் எதனைக் குறித்து எச்சரித்தார்களோ அதன் சாரமாகும். அது இதுதான்: அல்லாஹ் ஒருவன்; அவனுக்கு இணை துணை எதுவும் கிடையாது. 'லாஇலாஹ இல்லல்லாஹ்' வுடைய அர்த்தமும் இதுதான். அல்லாஹ் வணக்கத்திற்குத் தகுதியானவன்; இறைமையில் அவன் தனித்தவன்; படைத்துப் பரிபாலிப்பதில் அவன் ஒத்த ஒருவன்; அவனது பெயர்களிலும் தன்மை களிலும் (குறைகளை விட்டும்) பரிசுத்தமானவன். அல்லாஹ் கூறுகிறான்: "அவனுக்கு நிகரானவனை நீர் அறிவீரா?" (19:65)

74. "மனிதன் என்னைப் பொய்ப்படுத்தி விட்டான். அது அவனுக்கு அவசியமில்லாதது. மனிதன் என்னைத் திட்டி விட்டான். அது அவனுக்குத் தேவையில்லாதது. அவன் என்னைப் பொய்ப்படுத்துவது என்பது அவனை முன்பு இருந்தது போல மீண்டும் படைப்பதற்கு என்னால் இயலாது என்று அவன் கருதுவதாகும். அவன் என்னைத் திட்டுவ தென்பது எனக்கு சந்ததி இருப்பதாக அவன் கூறுவதாகும். நான் மனைவியையோ பிள்ளையையோ ஏற்படுத்திக்

கொள்வதை விட்டும் பரிசுத்தமானவன்” என்று அல்லாஹ் கூறுவதாக நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர்: இப்னு அப்பாஸ் (ரலி), நூல்: புகாரி-4482

**இந்நபிமொழியில்:**

அடியார்கள் மீது அல்லாஹ்வுடைய விசாலமான கருணையும், அவர்கள் மீது அவனுக்குள் பொறுமையும் இங்கு சுட்டிக்காட்டப்பட்டுள்ளது. ஆதாரப்பூர்வமான ஹதீஸில் வந்துள்ளது போல, தான் செவியுறுகிற துன்பத்தை மிகவும் சகித்துக் கொள்பவன் அல்லாஹ்வை விட வேறு எவனும் இல்லை. அல்லாஹ்வுக்கு மனைவி மக்கள் இல்லை என்று கூறப்பட்டுள்ளது. மாறாக அவன் ஏகன்! தேவையற்றவன்! அவன் (யாரையும்) பெறவுமில்லை! (யாருக்கும்) பெறக்கவும் இல்லை! அவனுக்கு நிகர் எவனுமில்லை! மு.ஃமினான அடியான் மனிதர்களின் துன்பங்களைப் பொறுத்துக் கொள்ள வேண்டும். இதோ (யாவற்றையும்) படைத்து வாழ்வாதாரம் வழங்கக்கூடிய இறைவன் மனிதர்களால் பொய்ப்படுத்தப் பட்டும் ஏசப்பட்டும் (அவர்களுக்கு) வாரி வழங்குபவனாக இருக்கிறான். அவ்வாறாயின் பாவம் செய்கின்ற பலவீனமான அடியான் எப்படி நடந்து கொள்ள வேண்டும்?

75. நபி (ஸல்) அவர்கள் எங்களிடையே ஒரு உரையில் ஐந்து விஷயங்களைக் கூறினார்கள். அதாவது “அல்லாஹ் தூங்குவதில்லை; அது அவனுக்கு அவசியமும் இல்லை. துலாக் கோலை அவன் தாழ்த்தவும் செய்கிறான்,உயர்த்தவும் செய்கிறான். பகலில் செய்யப்படும் செயல்களுக்கு முன் இரவில் செய்யப்பட்ட செயல்கள் அவனிடம் உயர்த்தப் படுகின்றன. (அதுபோல) இரவில் செய்யப்படும் செயல்களுக்கு முன் பகலில் செய்யப்பட்ட செயல்கள் அவனிடம் உயர்த்தப்

படுகின்றன. அவனுடைய திரை ஒளியாகும். அதை அவன் நீக்கினால் அவன் முகத்தின் பேரொளி, அவனது பார்வை சென்றடையும் வரை உள்ள அவனுடைய படைப்பினங்கள் அனைத்தையும் எரித்துவிடும்” என்று கூறினார்கள்.

அறிவிப்பவர்: அபூமூஸா (ரலி),

நூல்: முஸ்லிம்-179, இப்னுமாஜா-195, அஹ்மத்

**இந்நபிமொழியில்:**

அல்லாஹ்வுடைய நிர்வகிக்கும் ஆற்றலின் பூரணத்துவம் இங்கு சுட்டிக்காட்டப்பட்டுள்ளது. அவன் நித்திய ஜீவன், (பேரண்டம் முழுவதையும்) நன்கு நிர்வகிப்பவன், அசதியோ, தூக்கமோ அவனுக்கு ஏற்படுவதில்லை. தூக்கம் ஒரு பலவீன மாகும். அதை விட்டும் அல்லாஹ் பரிசுத்தமானவன். ஒளி எனும் திரை அல்லாஹ்வுக்கு இருப்பது இங்கு நிரூபண மாகின்றது. அவனிடம் (படைப்பினங்களின் வாழ்வாதாரத்தின்) துலாக்கோல் உள்ளது. அவன் நாடியவாறு அதைக் கூட்டிக் குறைத்துக் கொள்கிறான். ஒவ்வொரு பகலிலும் இரவிலும் அடியார்களின் செயல்கள் அவனிடம் உயர்த்தப்படுகின்றன. அவனுடைய மகத்துவத்தின் பரிபூரணத்துவமும், அவனுடைய பேரொளியும், பெருமையும் இங்கு சொல்லப்பட்டுள்ளது. அவன் ஒவ்வொரு பொருளையும் கண்காணிப்பவன். ஒவ்வொரு ஆன்மாவும் செய்தவற்றைப் பாதுகாப்பவன்.

அல்லாஹ் கூறுகிறான்: “உண்மையில் அல்லாஹ் தான் வானங்களையும் பூமியையும் விலகிவிடாமல் தடுத்து வைத்துள்ளான். அப்படி அவை விலகிவிட்டால் அவனன்றி எவரும் அவற்றைத் தடுத்து நிறுத்த முடியாது. அவன் மிகவும் சகிப்புத் தன்மையுடையவனாகவும் மன்னிப்பவனாகவும் இருக்கிறான். (35:41)

அல்லாஹ்வுடைய குண அம்சங்கள் என ஹதீஸ்களில் வந்துள்ள அனைத்தையும் ஹதீஸ்களில் எப்படி வந்துள்ளதோ அப்படியே நாம் ஏற்றுக் கொள்ள வேண்டும். அவற்றை மறுக்கவோ, ஒப்பாக்கவோ, உவமைப்படுத்தவோ, எந்த விதத்தில் என விவரிக்கவோ கூடாது. அவை எந்தக் கருத்தில் அல்லாஹ்விடமிருந்தும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடமிருந்தும் வந்திருக்கின்றனவோ அந்தக் கருத்தில் அவற்றை அப்படியே நாம் நம்ப வேண்டும்.

## வானவர்கள் சம்பந்தப்பட்டது

76. நபி (ஸல்) அவர்கள் ஜிப்ரீலைப் பார்த்தார்கள். அவருக்கு அறுநூறு இறக்கைகள் இருந்தன என்று இப்னு மஸ்வூத் (ரலி) அறிவித்துள்ளார்கள்.

நூல்: புகாரி-3232, முஸ்லிம்-174

“நான் ஜிப்ரீலைப் பார்த்தேன். அவருக்கு 600 இறக்கைகள் இருந்தன. அவரது இறக்கையிலிருந்து பல்வேறு நிறங்களைக் கொண்ட முத்துக்களும் மாணிக்கங்களும் சிதறியது” என்று அஹ்மதில் ஒரு அறிவிப்பு உள்ளது. இதன் அறிவிப்பாளரின் தொடர் நன்றாகவும் பலமாகவும் உள்ளதாக இப்னு கதீர் (ரஹ்) அவர்கள் குறிப்பிட்டுள்ளார்கள்.

**இந்நபிமொழியில்:**

ஜிப்ரீல் (அலை) அவர்களுக்கு ஏராளமான இறக்கைகளைக் கொடுத்திருப்பது அல்லாஹ்வின் ஆற்றலுக்குரிய சான்று களில் ஒன்று. ஜிப்ரீல் (அலை) அவர்களின் இந்தத் தோற்றம்- புகாரியில் வந்துள்ளது போல- அல்லாஹ், அவர்களைப் படைத்த அசல் தோற்றமாகக் கூட இருக்கலாம்.

(புகாரியில் உள்ள அந்த ஹதீஸ் வருமாறு: “முஹம்மத் (ஸல்) அவர்கள் தம்முடைய இறைவனைக் கண்டார்கள் என்று யார் கூறினாரோ அவர் மிகப் பெரும் பொய்யைப் புனைந்தவராவார். ஆயினும் அவர்கள் ஜிப்ரீலை அவரது (இயல்பான) தோற்றத்திலும் படைப்பிலும் அடி வானத்தை அடைத்துக் கொண்டு நின்றதைப் பார்த்தார்கள்” என்று ஆயிஷா (ரலி) அறிவித்துள்ளார்கள். நூல்: புகாரி-3234)

அல்லாஹ் கூறுகிறான்: (அவன்) வானவர்களை இரண் டிரண்டு, மும்மூன்று, நான்கு நான்கு சிறகுகளைக் கொண்ட தூதர்களாக அனுப்புவன். (35:1)

ஜிப்ரீலை மட்டும் இவ்வளவு அதிக எண்ணிக்கையில் இறக்கைகள் உடைவராக அல்லாஹ் ஆக்கியது அவருக்கு சிறப்பு மிகு அந்தஸ்து இருப்பதனால் தான்.

## நபி (ஸல்) அவர்களுக்கு வஹி வரும் விதம்

77. ஆயிஷா (ரலி) அறிவிப்பதாவது: ஹாரிஸ் பின் ஹிஸாம் (ரலி), அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம், ‘அல்லாஹ் வின் தூதரே! தாங்களுக்கு இறைச் செய்தி எவ்வாறு வருகிறது?’ என்று கேட்டார். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், “சில வேளைகளில் அது மணி ஓசையைப் போன்று என்னிடம் வரும். அவ்வாறு வருவது எனக்கு மிகக் கடினமாக இருக்கும். அ(வ் வான)வர் கூறியதை நான் நினைவுபடுத்திக் கொண்ட நிலையில் அவர் என்னை விட்டுப் பிரிந்து விடுவார். சில வேளைகளில் அவ்வானவர் மனித உருவில் தோன்றி என்னுடன் உரையாடுவார். அப்போது அவர் கூறுவதை நான் நினைவில் இருத்திக் கொள்வேன்” என்று கூறினார்கள்.

மேலும் ஆயிஷா (ரலி) கூறியதாவது: கடும் குளிரான நாட்களில் நபி (ஸல்) அவர்களுக்கு வஹி இறங்குவதை நான் கண்டேன். அவ்வானவர் நபி (ஸல்) அவர்களை விட்டு விலகிச் செல்லும்போது (அந்தக் கடுங்குளிரிலும்) அவர்களின் நெற்றி யிலிருந்து வியர்வை சொட்டும்.

நூல்: புகாரி-2, முஸ்லிம்-2333

**இந்நபிமொழியில்:**

நம்முடைய நபி (ஸல்) அவர்களுக்கு இறைச் செய்தி - வஹி இறங்குவதைப் பொறுத்து அதற்கு இரு நிலைகள் உள்ளன. வஹிவுடைய பாரம், அதன் வருகை மற்றும் அதன் மதிப்பு ஆகியவற்றின் காரணமாக, அது வரும் போது நபி (ஸல்) அவர்கள் சிரமத்தை உணர்வார்கள்.

அல்லாஹ் கூறுகிறான்: “இந்தக் குர்ஆனை ஒரு மலையின் மீது நாம் இறக்கியிருந்தால் அது அல்லாஹ்வின் அச்சத்தால் பணிந்து நொருங்கி விடுவதைக் காண்பீர்.” (59:21)

ஏதோ ஒரு வகையில் ஒப்புமை இருந்தால் தீய பொருளைக் கொண்டு உவமானம் கூறுவது கூடும். ஏனெனில் இங்கு மணி (மார்க்கத்தில்) ஒரு தீய பொருள். என்றாலும் ஒன்றை அதன் ஓசையுடன் ஒப்பிடப்பட்டுள்ளது அவ்வளவு தான். மலக்குகள் அல்லாஹ்வின் அனுமதியுடன் மனிதர்களின் உருவில் உருவமெடுப்பர்கள். இங்கு வானவர் என்பது ஜிப்ரீலைக் குறிக்கும்.

வஹி இறங்கும்போது நபி (ஸல்) அவர்களின் உடலுக்குப் பாரம் ஏற்பட்டு விடுகிறது. காரணம் (வருகின்ற) செய்தியும் (பேசப்படுகின்ற) பேச்சும் மகத்தானதாகவும், வஹி பாரமான தாகவும் இருப்பதனாலும் நபி (ஸல்) அவர்கள் அதற்கு கூடுதல்

முக்கியத்துவம் கொடுப்பதனாலும் ஆகும். இத்தனைக்குப் பிறகும்- வஹியைத் தாங்குவதை அல்லாஹ் அவர்களுக்கு எளிதாகவும் இலேசாகவும் ஆக்கியிருக்கிறான் எனும் வகையில் - அது அல்லாஹ்வின் புறத்திலிந்து கிடைக்கும் ஒருவித மென்மையாகவும் அவன் தூதருக்கு ஒரு உதவி யாகவும் அமைகிறது. இல்லையெனில் "இந்தக் குர்ஆனை ஒரு மலையின் மீது நாம் இறக்கியிருந்தால் அது அல்லாஹ் வின் அச்சத்தால் பணிந்து நொருங்கி விடுவதைக் காண்பீர். (59:21)" என்று அல்லாஹ் கூறியதைப்போலாகிவிடுமே!

## நபி (ஸல்) அவர்களுக்கு வஹி எவ்வாறு துவங்கியது?

78. நபி (ஸல்) அவர்களுக்கு துவக்கத்தில் இறைச் செய்தி தூக்கத்தில் தோன்றும் நல்ல கனவுகள் மூலமாகவே வந்தது. அப்போது அவர்கள் என்ன கனவு கண்டாலும் வைகறையின் விடியலைப் போலத் தெளிவாக இருக்கும். பின்னர் தனிமை அவர்களுக்கு விருப்பமாயிற்று. ஹிராக் குகையில் அவர்கள் தனித்திருந்தனர். தமது குடும்பத்தாரிடம் திரும்பி வருவதற்கு முன் பல இரவுகள் (அங்கே தங்யிருந்து) வணக்க வழிபாடு களில் ஈடுபட்டிருந்தனர். அந்த நாட்களுக்கான உணவுகளை தம்முடன் கொண்டு செல்வார்கள். (அது முடிந்ததும்) மீண்டும் (தமது துணைவியார்) கதீஜா (ரலி) அவர்களிடம் திரும்பி வருவார்கள். அதே போன்று பல நாட்களுக்கான உணவைக் கொண்டு செல்வார்கள். இந்த நிலை ஹிராக் குஹையில் அவர்களுக்கு சத்தியம் வரும் வரை நீடித்தது.

(ஒரு நாள்) ஒரு வானவர் அவரிடம் வந்து, "ஓதுவீராக" என்றார். அதற்கவர்கள் "நான் ஓதத் தெரிந்தவனில்லையே!"

என்றார்கள். நபி (ஸல்) அவர்கள் (அந்த நிலையைப் பற்றி பின் வருமாறு) கூறினார்கள்: அவர் என்னைப் பிடித்து எனக்கு கடும் சிரமம் ஏற்படும் அளவுக்கு இறுகக் கட்டியணைத்தார். பிறகு என்னை விட்டு விட்டு மீண்டும் “ஓதுவீராக” என்றார் (அப்போதும்) “நான் ஓதத் தெரிந்தவனில்லை” என்றேன். இரண்டாவது முறையும் அவர் என்னைப் பிடித்து நான் மிகவும் சிரமப்படும் அளவுக்கு இறுகக் கட்டி அணைத்து என்னை விட்டு விட்டு மீண்டும் “ஓதுவீராக” என்றார். (அப்போதும்) “நான் ஓதத் தெரிந்தவனில்லை” என்றேன். அவர் என்னைப் பிடித்து மூன்றாவது முறையும் கட்டி அணைத்து விட்டு விட்டு, “படைத்த உமது இறைவனின் பெயரால் ஓதுவீராக. அவன் தான் மனிதனை கருவுற்ற சினை முட்டையிலிருந்து (அலக்) படைத்தான். ஓதுவீராக! உம் இறைவன் கண்ணியமானவன்” என்றார். மேலும் ஆயிஷா (ரலி) கூறியதாவது:

பிறகு இதயம் படபடத்தவர்களாக அந்த வசனங்களுடன் (தமது துணைவியார்) குவைலிதின் மகள் கதீஜா (ரலி) யிடம் வந்து, “என்னைப் போர்த்துங்கள், என்னைப் போர்த்துங்கள்” என்றார்கள். கதீஜா (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களைப் போர்த்தினார்கள். (நடுக்கம் தீர்ந்ததும்) கதீஜா (ரலி) யிடம் நடந்த செய்தியைத் தெரிவித்து விட்டுத் தமக்கு ஏதும் நேர்ந்து விடுமோ என தாம் உறுதியாக அஞ்சுவதாகவும் கூறினார்கள். அப்போது கதீஜா (ரலி) அவர்கள் “அவ்வாறல்! அல்லாஹ்வின் மீது ஆணையாக! அல்லாஹ் உங்களை ஒருபோதும் இழிவுபடுத்த மாட்டான், (ஏனெனில்) தாங்கள் உறவினர்களை அனுசரிக்கிறீர்கள். (சிரமப்படுவோரின்) சுமைகளை சுமந்து கொள்கிறீர்கள், வறியவர்களுக்காக உழைக்கிறீர்கள், விருந்தினர்களை உபசரிக்கிறீர்கள்,

உண்மையான சோதனையில் (ஆட்பட்டோருக்கு) உதவு கிறீர்கள்" என்றார்கள்.

பின்னர் நபி (ஸல்) அவர்களைத் தமது தந்தையின் உடன் பிறந்தவரான நவ்.்.பல் என்பவரின் மகன் வரகாவிடம் அழைத்துச் சென்றார்கள். நவ்.்.பல் அஸத் என்பவரின் மகனும், அஸத் அப்துல் உஸ்ஸாவின் மகனும் ஆவார். வரகா அறியாமைக் காலத்திலேயே கிறிஸ்தவ மதத்தைத் தழுவியவராக இருந்தார். மேலும் அவர் ஹிப்ரு மொழியில எழுதத் தெரிந்தவராகவும் இஞ்ஜீல் வேதத்தை அவர் ஹிப்ரு மொழியில் எழுத வேண்டும் என்று அல்லாஹ் நாடிய அளவுக்கு எழுதியவராகவும், கண் பார்வையற்ற பெரும் வயோதிகராகவும் இருந்தார். அவரிடம் கதீஜா (ரலி), 'என் தந்தையின் சகோதரனின் மகனே! உம் சகோதரனின் மகன் கூறுவதைக் கேளுங்கள்' என்றார்கள். அப்போது வரகா, நபி (ஸல்) அவர்களிடம், 'என் சகோதரர் மகனே! நீர் எதைக் கண்டீர்?' எனக் கேட்டார். நபி (ஸல்) அவர்கள், தாம் பார்த்த செய்தியை அவர்களிடம் கூறினார்கள்.

(அதைக் கேட்டதும்) வரகா, (நபி (ஸல்) அவர்களிடம்) 'இவர் தாம் மூஸாவிடம் இறைவன் அனுப்பிய "நாமூஸ்" (ஜிப்ரீல்)' என்று கூறிவிட்டு, 'உமது சமூகத்தார் உம்மை (உமது நாட்டிலிருந்து) வெளியேற்றும் சமயத்தில் நான் உயிருடன் திடகாத்திரமான இளைஞசராக இருக்க வேண்டுமே!' என்றும் அங்லாய்த்துக் கொண்டார். அப்போது நபி (ஸல்) அவர்கள், "மக்கள் என்னை வெளியேற்றவா போகிறார்கள்?" என்று கேட்டதும் அதற்கவர், 'ஆம்! நீர் கொண்டு வந்திருப்பது போன்ற (சத்தியத்)தைக் கொண்டு வந்த எந்த மனிதரும் (மக்களால்) பகைத்துக் கொள்ளப்

படாமல் இருந்ததில்லை. (நீர் வெளியேற்றப்படும்) அந்த நாளை நான் அடைந்தால் உமக்குப் பலமான உதவி செய்வேன்' என்று கூறினார். அதன் பின் வரகா நீண்ட நாள் வாழாமல் இறந்து விட்டார். (இந்த முதற்செய்தியுடன்) வஹி (சிறிது காலம்) நின்று விட்டது. (புகாரி-4, முஸ்லிம்-160)

**இந்நபிமொழியில்:**

நபிமார்களின் கனவு உண்மையானவையே! அல்லாஹ் இப்ராஹீம் (அலை) அவர்களையும் அவர்களது மகனையும் குறித்து பின் வருமாறு கூறுகிறான்: "என் அருமை மகனே! நான் உன்னைப் பலியிடுவதாய்க் கனவு கண்டேன்." (37:102) குழப்பம் ஏற்படும்போது அல்லது வழிபாடு செய்தல், மக்களை விட்டும் நிம்மதியாக இருத்தல் போன்ற நன்மை இருந்தால் மக்களை விட்டும் ஒதுங்கி தனிமையில் இருப்பதற்கு ஹதீஸில் ஆதாரம் வந்துள்ளது. பயணங்கள் மற்றும் அது போன்ற காரியங்களுக்காக உணவு கொண்டு செல்லலாம். அது தவக்குலுக்கு முரணானதல்ல. ஆயினும் இது காரண காரியங்களில் ஒன்றாகும். இக்ர.ஃ.- "ஓதுவீராக" என்ற வசனம் திருக்குர்ஆனில் முதன் முதலாக இறங்கிய வசனமாகும்.

இங்கு கல்வி கற்றல், விளங்கிக் கொள்ளல், புரிந்து கொள்ளல் ஆகியவற்றுக்கு ஆர்வமூட்டப்பட்டுள்ளது. நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் எழுதப் படிக்கத் தெரியாதவர்களாக இருந்தார்கள் என்பது நிரூபணமாகிறது. ஆசிரியர் ஒரு விஷயத்தை முக்கியமாகக் கருதும்போது மாணவனின் மேனியைத் தொட்டுச் சொல்லிக் கொடுக்கலாம்- அந்த விஷயத்தை அவன் விளங்கிக் கொள்வதற்காக. பயம் நபிமார்களுக்கும் ஏற்பட்டுள்ளது. நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் மனிதர்கள் தாம் என்பதும் நரூபணமாகின்றது.

ஒரு மனிதன் தனக்கு ஏற்படுகின்ற கஷ்டங்களையும் பயங்களையும் தன் மனைவியிடம் முறையிடலாம். கதீஜா (ரலி) அவர்களின் பரிபூரண விவேகமும், சிறந்த அறிவும், சீறிய கருத்தும் இங்கு உணர்த்தப்பட்டுள்ளது. நன்மை செய்யக் கூடியவர்கள் தீமையின் கேடுகளிலிருந்து பாதுகாப்புப் பெறுகிறார்கள்.

சான்றோர்கள் விஷயத்தில் அல்லாஹ்வின் நடைமுறை அவர்களைப் பாதுகாப்பதும், அவர்களுக்கு நல்ல முடிவை ஏற்படுத்துவதும் ஆகும். மட்டுமல்ல அல்லாஹ்வைக் குறித்து நல்லெண்ணம் கொள்ள வைப்பதும் அந்நடை முறையில் ஒன்றுதான். திண்ணமாக அல்லாஹ் தன் நேசர்களைப் பாதுகாப்பவனும் தன் அடியார்களுக்கு உதவி செய்பவனும் ஆவான். உண்மையில் இழிவும் தீய முடிவும் அல்லாஹ்வின் எதிரிகளுக்காகும். அது அவர்களுடைய செயல்களுக்குப் பொருத்தமான தண்டனையே.

இந்நபிமொழியில் உறவினர்களை அனுசரித்தலுக்கு ஆர்வமூட்டப்பட்டுள்ளது. அது நபிமார்களின் பண்புகளில் ஒன்று. இவ்வுலகிலும் மறுவுலகிலும் வெற்றியும் ஈடேற்றமும் பெறுவதற்கு அது ஒரு காரணமாக இருக்கும். பலவீனர் களுக்கும் பாதிக்கப்பட்டவர்களுக்கும் உதவி செய்வதும், ஒத்தாசையாக இருப்பதும், வறியவர்களுக்கும் ஏழைகளுக்கும் ஆறுதல் கூறுவதும் அவர்களுக்கு நன்மை செய்வதும் இங்கு சுட்டிக்காட்டப்பட்டுள்ளது. இவை நபிமார்களின் பண்பாடுகள் ஆகும். விருந்தாளியைக் கண்ணியப்படுத்துதல், தூது வந்தவருக்கு அன்பளிப்பு, சன்மானம் வழங்குதல் பற்றியும் இங்கு கூறப்பட்டுள்ளது. இவை யாவும் நல்லடியார்களின் பண்புகளாகும்.

மேலும் இந்நபிமொழியில் துன்பப்படுபவர்களுக்கு அவர் களுடைய துன்பங்களில் உதவி செய்வது, அவர்களை விட்டும் அத்துன்பங்களை இலகுவாக்குவது பற்றியும் கூறப்பட்டுள்ளது. உண்மை பேசுவதற்கு கூலி உண்டு. அது நபி (ஸல்) அவர்களுடைய மிகச் சிறந்த குணங்களில் ஒன்று. அமானிதங்களை ஒப்படைப்பதற்கும் நல்ல வாக்குறுதிகளை நிறைவேற்றுவதற்கும் ஆர்வமூட்டப்பட்டுள்ளது. அல்லாஹ்வின் அடியார்களை கண்ணியப்படுத்துவோரை அல்லாஹ் கண்ணி யப்படுத்துகிறான். துன்பம் நேர்ந்தவரை சாந்தப்படுத்துவதும், அவருடைய துன்பத்தை இலகுவாக்குவதும், ஒரு மனிதனுக்கு ஏதும் பிரச்சனை ஏற்பட்டால் நல்ல ஆலோசனை வழங்கு பவரிடம் அதைத் தெரியப்படுத்துவதும் விரும்பத்தக்கதாகும். உதவி செய்தல், ஆலோசனை வழங்குதல் போன்ற மனைவி செய்யக்கூடிய நன்மைகள் கணவன் மீது தாக்கத்தை ஏற்படுத்தும்.

வேதம் பற்றிய ஞானம் உள்ளவரிடம் அவரிடமுள்ள ஞானத்தை அறிந்து கொள்வதற்காக ஏதாவது கேட்பது. அவரை சோதித்துப் பார்த்தல் அல்லது அவர் கூறுவதி லிருந்து படிப்பினை பெறுதல் எனும் அடிப்படையில் இவ்வாறு கேட்கலாம். எல்லா நபிமார்களின் பிரச்சாரமும் ஒரேமாதிரி தான். அவர்களில் ஒருவர் மற்றவரை உண்மைப்படுத்துகிறார். நபிமார்களைப் பின்பற்றுவோர் எதிர்க்கப்படுவது நடந்தே தீருகின்ற விஷயம் ஆகும். இது கடந்த கால மக்களின் நடைமுறையும், (இறைவனால்) தீர்மானிக்கப்பட்ட விஷயமும் ஆகும். அல்லாஹ் தனது நபிமார்களுக்கும் நேசர்களுக்கும் துன்பங்களை விதித்திருக்கிறான். இது அவர்களை சோதிப் பதற்காகவும் அவர்களுக்கு நல்ல முடிவு ஏற்படுவதற்காகவும்

தான். அனுபவசாலிகளிடம் கேட்பதற்கும், அறிவார்ந்த விஷயங்களை யார் சொன்னாலும் எடுத்துக் கொள்வதற்கும் ஆர்வமூட்டப்பட்டுள்ளது. நபி (ஸல்) அவர்களுக்கு ஏற்பட்ட விஷயங்கள் யாவும் முன் சென்ற இறைவேதம் அனைத்திலுமோ அல்லது சிலவற்றிலோ சொல்லப்பட்டுள்ளன. ஜிப்ரீல் (அலை) அவர்கள் நபி (ஸல்) அவர்களிடம் வந்தது போலவே மூஸா (அலை)அவர்களிடமும் வந்திருக்கிறார்கள்.

79. வஹி நின்று போயிருந்த இடைக் காலத்தைப் பற்றி நபி (ஸல்) அவர்கள் கூறும்போது பின்வருமாறு கூறினார்கள்: "நான் நடந்து போய்க் கொண்டிருக்கும்போது வானத்திலிருந்து ஒரு குரலைக் கேட்டு என் தலையை உயர்த்திப் பார்த்தேன். அப்போது ஹிராக் குகையில் என்னிடம் வந்த அதே வானவர் வானம், பூமிக்குமிடையே ஓர் ஆசனத்தில் அமர்ந்திருக்கக் கண்டு அச்சத்தால் திடுக்குற்றேன். உடனே (வீட்டிற்குத்) திரும்பி வந்து (கதீஜாவிடம்) "என்னைப் போர்த்துங்கள், என்னைப் போர்த்துங்கள்" என்றேன். பிறகு "போர்த்திக்கொண்டிருப்பவரே! எழுந்து எச்சரிக்கை செய்வீராக! உம் இறைவனைப் பெருமைப்படுத்துவீராக! உமது ஆடைகளைத் தூய்மைப்படுத்துவிராக! அசுத்தத்தை வெறுப்பீராக!" (74:1-5) என்ற வசனங்களை இறைவன் அருளினான்.அசுத்தம் என்பது சிலைகள் ஆகும். அதன் பின் வஹி தொடர்ந்து வரலாயிற்று

அறிவிப்பவர்: ஜாபிர் (ரலி) , நூல்: புகாரி-4925, முஸ்லிம்-161

**இந்நபிமொழியில்:**

முதன் முதலில் வஹி ஹிராக் குகையில் தான் வந்தது. அந்த வசனம் இது தான்: "படைத்த உமது இறைவனின் பெயரால் ஓதுவீராக!" (96:1) கதீஜா (ரலி) அவர்களின் சிறப்பு இங்கு சுட்டிக்காட்டப்பட்டுள்ளது. காரணம் அவர்கள் நபி(ஸல்)

அவர்களுக்கு அவர்களின் பிரச்சாரப் பணியில் உதவியாக இருந்துள்ளார்கள். வானம், பூமிக்கிடையே அமர்ந்திருந்தவர் ஜிப்ரீல் (அலை) ஆவார். இதற்கு முன் அவருடைய வருகை இருந்திருக்கிறது என்பது நிரூபணமாகின்றது. வானவர்களை பல்வேறு உருவங்களில் உருவெடுக்கச் செய்வதற்கு அல்லாஹ் ஆற்றலுள்ளவன்.

நபிமார்களுக்கும் அச்சம் ஏற்படுகின்றது. வஹி பல கட்டங்களாக வந்திருக்கிறது. வஹியில் சில சிலதை விடக் கடுமையானதாக இருக்கும். காரணம் அது அதிகமாகவும் தொடர்ச்சியாகவும் வருவதனால். அசுத்தத்தை விட்டும் ஆடைகளை தூய்மைப்படுத்த வேண்டும். இதனால் தான் சில அறிஞர்கள் தொழுகைக்கு ஆடை தூய்மையாக இருக்க வேண்டும் என்பதற்கு இந்த வசனத்தை ஆதாரமாகக் காட்டுகிறார்கள். இது ஒன்றும் தூரமான விஷயமல்ல.

சின்னச் சின்ன மார்க்கப் பிரச்சனைகளில் நபித்தோழர் களுக்கிடையே கருத்து வேறுபாடு நிகழ்ந்திருக்கிறது என்பதற்கு இதில் சமிஞ்சை உள்ளது. ‘இக்ர∴’ அத்தியாயம் தான் முதலில் இறங்கிய அத்தியமாகும் என்பது ஆயிஷா (ரலி) மற்றும் பலரின் கருத்தாகும். ‘முத்தஸ்ஸிர்’ அத்தியாயம் தான் முதலில் இறங்கிய அத்தியாயமாகும் என்பது ஜாபிர் (ரலி) அபிப்பிராயமாகும். “எழுந்து எச்சரிக்கை செய்வீராக!” என்ற வசனத்தின் கருத்தாவது, உம்மை நம்பாதவர்களை வேதனை குறித்து எச்சரிப்பீராக! என்பதாகும்.

## வஹியின் கடுமை

80. "நபி (ஸல்) அவர்களுக்கு வஹி இறங்கும்போது சிரமம் ஏற்படும். அதனால் அவர்களின் முகம் புழுதி படிந்ததுபோல் மாறும்" என உபாதா பின் ஸாமித் (ரலி) அறிவிக்கிறார்கள்.

நூல்: முஸ்லிம்-2334

**இந்நபிமொழியில்:**

வஹி வரும்போது சிரமம்படுவார்கள் என்பதன் கருத்து அதற்கு கூடுதல் முக்கியத்துவம் தருவார்கள் என்பதாகும். அப்போது அவர்களின் முகம் மாறிவிடும் என்பதன் கருத்து முகம் சிவந்து விடும் என்பதாகும். காரணம் அவர்களுக்கு இறங்குகின்ற விஷயம் அவ்வளவு மகத்தானது- பாரமானது! ஏனெனில் வஹி அல்லாஹ்வுடைய வார்த்தையாகும். அதில் ஏவல்களும், விலக்கல்களும், எச்சரிக்கைகளும் இருக்கின்றன. இன்னும் எத்தகைய செய்திகள் அதிலுள்ளன எனில் அவை குழந்தைகளின் தலைகளை நரைக்கச் செய்திடும், அதனால் உடல்கள் சிலிர்த்து, அதன் பயங்கரத்தால் உள்ளங்கள் நடு நடுங்கும். அதிலிருந்து நம்மைக் காப்பதற்கு அல்லாஹ் துணை செய்வானாக!

81. "(நபியே!) உமது நாவை இதற்காக அவசரப்பட்டு அசைக்காதீர்!" (75:16) என்ற வசனம் குறித்து இப்னு அப்பாஸ் (ரலி) அறிவிப்பதாவது:

'நபி(ஸல்) அவர்களுக்கு இறைச்செய்தி அருளப்படும்போது மிகுந்த சிரமம் ஏற்பட்டது. இது அவர்களின் உதடுகளை அவர்கள் அசைப்பதன் மூலம் புலனாயிற்று. நபி (ஸல்) அவர்கள் தமது உதடுகளை அசைத்தது போன்று நான் உங்களுக்கு அசைத்துக் காட்டுகிறேன் என்று கூறி

(அசைத்துக் காட்டி) விட்டு, உடனே அல்லாஹ் பின்வரும் வசனங்களை அருளினான்' என்று கூறினார்கள்.

"(நபியே!) உமது நாவை இதற்காக அவசரப்பட்டு அசைக்காதீர்! அதைத் திரட்டுவதும் ஓதச் செய்வதும் நம்மைச் சார்ந்தது." அதாவது அதை உமது உள்ளத்தில் ஒன்று திரட்டி அதை ஓதச் செய்வது நம்மைச் சார்ந்தது. "எனவே நாம் அதை ஓதும்போது அந்த ஓதுதலைப் பின்பற்றுவீராக!" அதாவது செவிதாழ்த்திக் கேட்பீராக! "பின்னர் அதைத் தெளிவுபடுத்துவது நம்மைச் சார்ந்தது." (75:16-19) அதாவது பின்னர் அதை ஓதச் செய்வது நம்மைச் சார்ந்தது. அதன் பின்னர் நபி (ஸல்) அவர்களிடம் ஜிப்ரீல் (அலை) வரும்போது (அவர்கள் ஓதுவதை) செவிதாழ்த்திக் கேட்பதை வழக்கமாக்கிக் கொண்டார்கள். ஜிப்ரீல் (அலை) சென்றதும் அவர்கள் ஓதியதுபோன்றே நபி (ஸல்) அவர்களும் ஓதினார்கள். (புகாரி-5, முஸ்லிம்-448)

**இந்நபிமொழியில்:**

திருக்குர்ஆன் ஓதும்போது நிறுத்தி நிதானமாக ஓத வேண்டும். நபி (ஸல்) அவர்களுக்கு வஹி இறங்கும்போது கடுமையாகவும் பாரமாகவும் இருக்கும். காரணம் அப்போது நபி (ஸல்) அவர்கள் தமது கவனத்தை வஹியின் பக்கம் திருப்பி, அதற்கு (கூடுதல்) முக்கியத்துவம் கொடுக்க வேண்டிய திருப்பதால். மற்றவர்களின் சொல், செயல்களை அவர்கள் செய்தது போல செய்து காட்டுவது (Mimicry) கேலி, கிண்டலுக்கு என்று இல்லாமல் ஒரு நன்மைக்காக என்றால் அது கூடும். அல்லாஹ் தனது கண்ணியத்திற்குரிய வேதத்தை அழிவிலிருந்து காப்பற்றப் பொறுப்பேற்றுள்ளான்.

நபி (ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் வேதத்தை தமது இதயத்தில் மனனம் செய்து கொண்டார்கள். இது ஒரு அற்புதமாகும். ஏனெனில் நபி (ஸல்) அவர்கள் எழுதப் படிக்கத் தெரியாதவர்களாக இருந்தார்கள். ஒரு விஷயத்தைக் கூறும் போது அதற்குரிய விளக்கத்தை உடன் கூறாமல் பின்னர் கூறுவது கூடும். திருக்குர்ஆனை மௌனமாக இருந்து செவி தாழ்த்திக் கேட்பது மார்க்கமாக்கப்பட்டுள்ளது- அதனை சிந்தித்து விளங்கிக் கொள்வதற்காக. ஆசிரியர் கூறுவதை மாணவன் செவிதாழ்த்திக் கேட்பதும், அவர் பேசும் போது குறுக்கீடு செய்யாமல் மௌனம் காப்பதன் முக்கியத்துவமும் இங்கு கூறப்பட்டுள்ளது.

கற்றதை மனனம் செய்வதற்கும், அதை நினைவுபடுத்திக் கொள்வதற்கும், மறந்து போய்விடுமோ அல்லது அழிந்து போய்விடுமோ என அஞ்சி அதனைப் பேணிப் பாதுகாத்துக் கொள்வதற்கும் ஆர்வமூட்டப்பட்டுள்ளது. ஆசிரியருக்குப் பின்னால் அவர் சொல்வதைத் திருப்பிச் சொல்வது, அவர் வாசிக்கும்போது செவிதாழ்த்தி, கவனமாகக் கேட்பது பற்றியும் இங்கு சொல்லப்பட்டுள்ளது. அறிஞர் பெருமக்களிடமிருந்து கல்வியை வாய் வழியாகக் கற்றுக் கொள்வது, கல்வியை கொஞ்சம் கொஞ்சமாகக் கற்றுக் கொள்வது பற்றியும் இங்கு கூறப்பட்டுள்ளது. கல்வியை (ஒரே நேரத்தில்) முழுமையாகக் கற்றுக் கொள்பவர் முழுவதையும் வீணாக்கி விடுவார்.

மனதில் நன்கு பதிவதற்காக கற்றதை அவ்வப்போது திருப்பிப் பார்க்க வேண்டும். "ஜிப்ரீல் சென்றதும் அவர்கள் ஓதியது போன்றே நபி (ஸல்) அவர்களும் ஓதினார்கள்." என்ற வாசகத்திலிருந்து இதை விளங்கலாம். கல்வி கற்கும் போது சிரமம் எடுத்துக் கொள்வது, கஷ்டங்களைத் தாங்கிக்

கொள்வது பற்றியும் இங்கு சுட்டிக்காட்டப்பட்டுள்ளது. ஏனெனில் கல்வி மகத்தானதாகும்.

## நயவஞ்சகத்தின் அடையாளங்கள்

அல்லாஹ் கூறுகிறான்: "நயவஞ்சகர்கள் அல்லாஹ்வை ஏமாற்ற நினைக்கின்றனர். அவனோ அவர்களை ஏமாற்ற வுள்ளான். அவர்கள் தொழுகையில் நிற்கும்போது சோம்பேறி களாகவும் மக்களுக்குக் காட்டுவொராகவும் நிற்கின்றனர். குறைவாகவே அல்லாஹ்வை நினைக்கின்றனர்." (4:142)

82. நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: "நயவஞ்சகனின் அடையாளங்கள் மூன்று. அவன் பேசினால் பொய்யுரைப்பான், அவன் வாக்களித்தால் மாறு செய்வான், அவனை நம்பினால் துரோகம் செய்வான்." அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரலி),

நூல்: புகாரி-33, முஸ்லிம்-59

**இந்நபிமொழியில்:**

நயவஞ்சகம் இரு வகைப்படும். செயல் ரீதியானது, கொள்கை ரீதியானது. செயல் ரீதியான நயவஞ்சகமே இங்கு நோக்கமாகும். சில வேளை ஒரு முஸ்லிமிடம் நயவஞ் சகத்தின் ஒரு அம்சமோ அல்லது அதற்கும் கூடுதலாகவோ இருக்கும். நயவஞ்சகம் ஏராளமான கிளைகளைக் கொண்டது. அவற்றில் சில, சிலதை விட மோசமானது. இங்கு கூறப்பட்ட இந்த அம்சங்களில் எவன் நிரந்தரமாகவும் பிடிவாதமாகவும் நிலைத்திருக்கிறானோ அவன் நயவஞ்சகன் என்றழைக் கப்படுவான்.

நயவஞ்சகத்துக்கு சில அடையாளங்கள் இருக்கின்றன. அவை நயவஞ்சகனை அடையாளம் காட்டும். பேச்சில் பொய் யுரைப்பது ஹராமாகும். அது நயவஞ்சகர்களின் பண்புகளில்

ஒன்றாகும். வாக்கு மீறல் தடை செய்யப்பட்டதாகும். அது ஒரு மு.ஃமினின் பண்பல்ல. நம்பிக்கையில் துரோகம் செய்வதும் விலக்கப்பட்டதாகும். இத்தகைய குணமுடையவன் நயவஞ்சகன் என்றழைக்கப்படுவான். செயல்ரீதியான நயவஞ்சகம் கொள்கை ரீதியான நயவஞ்சகத்தைப் போல் மார்க்கத்தை விட்டும் வெளியேற்றி விடாது. மாறாக அது பெரும் பாவங்களின் வகையைச் சார்ந்ததாகும்.

83. நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: “நான்கு பண்புகள் எவனிடம் உள்ளனவோ அவன் வடி கட்டிய நயவஞ்சகன் ஆவான். அவற்றில் ஒன்று யாரிடமேனும் இருந்தால் அதை விட்டொழிக்கும் வரை நயவஞ்சகத்தின் ஒரு பண்பு அவனிடம் இருந்து கொண்டே இருக்கும். நம்பினால் துரோகம் செய்வான், பேசினால் பொய் பேசுவான், ஒப்பந்தம் செய்தால் அதை மீறுவான், விவாதம் செய்தால் நேர்மை தவறிப் பேசுவான்.” அறிவிப்பவர்: அப்துல்லாஹ் பின் அம்ர் (ரலி),

நூல்: புகாரி-34, முஸ்லிம்-58

**இந்நபிமொழியில்:**

நயவஞ்சகத்தின் பண்புகள் பலவாகும். அவை பலவகைகளில் உள்ளன. இங்கு கூறப்பட்ட எண்ணிக்கை நிர்ணயம் செய்வதற்கல்ல. மாறாக இதல்லாமல் நயவஞ்சகர்களின் பண்புகள் இன்னும் பல உள்ளன. நயவஞ்சகத்தில் மனிதர்களுக்கிடையே வேறுபாடுகள் உள்ளன. சிலரிடம் அது குறைவாகவும், இன்னும் சிலரிடம் கூடுதலாகவும் வேறு சிலரிடம் இல்லாமலும் காணப்படுகின்றது. ஒப்பந்தம் செய்யும் போது அதற்கு மோசடி செய்வது ஹராமாகும். இது நயவஞ்சகர்களின் தனித்தன்மைகளில் மிக முக்கியமானதாகும். வழக்காடும்போது நேர்மை தவறிப் பேசுதல் விலக்கப்

பட்டதாகும். அத்தகையவனிடம் நயவஞ்சகமும், மார்க்கத்தில் அலட்சியமும் இருக்கிறது என்பதற்கு இது சான்றாகும்.

84. "ஈமானின் அடையாளம் அன்ஸாரிகளை நேசிப்பது. நயவஞ்சகத்தின் அடையாளம் அன்ஸாரிகளை வெறுப்பது" என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர்: அனஸ் (ரலி), நூல்: புகாரி-17, முஸ்லிம்-74

**இந்நபிமொழியில்:**

அன்ஸாரிகளின் சிறப்பு இங்கு கூறப்பட்டுள்ளது. ஈமானுக்கு அடையாளங்களும் அறிகுறிகளும் இருக்கின்றன. "அன்ஸார்" என்பது, நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் மதீனாவுக்கு ஹிஜ்ரத் செய்த பிறகு அவர்களுக்கு உதவி செய்தோருக்கு திருக்குர்ஆனிலும் ஹதீஸிலும் மார்க்கம் சூட்டிய பெயராகும். இஸ்லாத்தில் மக்களுடைய நற்செயல்கள், சோதனைகளைப் பொறுத்து அவர்களுக்கிடையே ஏற்றத் தாழ்வுகள் உள்ளன. அன்ஸாரிகள் இத்தகைய சிறப்பைப் பெற்றதற்குக் காரணம் அவர்கள் நபி (ஸல்) அவர்களுக்கு செய்த உதவியினால் தான். இதிலிருந்து இப்படியும் ஒரு கருத்துக் கொள்ளலாம். அதாவது யாரெல்லாம் இறைமார்க்கத்திற்கு உதவுகிறாரோ அவர்களை நேசிப்பதும் ஈமானில் ஓர் அம்சமாகும். உள்ளம் சார்ந்த நற்செயல்கள் ஈமானைச் சேர்ந்ததாகும். ஈமானும் ஒரு நற்செயலாகும். இதில் மனிதர்களுக்கிடையே ஏற்றத் தாழ்வுகள் இருக்கின்றன. ஈமான் அதிகரிக்கவும் செய்யும்; குறையவும் செய்யும். நேசித்தல் நற்கூலியையும் வெறுத்தல் தண்டனையையும் பெற்றுத்தரக்கூடிய செயல் ஆகும்.

## இறைநிராகரிப்பில் ஏற்றத் தாழ்வு

85. “ஒரு முஸ்லிமைத் திட்டுவது பாவமாகும். அவனைக் கொல்வது இறைநிராகரிப்பாகும்” என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர்: இப்னு மஸ்வூத் (ரலி),

நூல்: புகாரி-48, முஸ்லிம்-64, திர்மிதி-2636, இப்னுமாஜா-69

**இந்நபிமொழியில்:**

தான் அறியாத விதத்தில் தனது நல்லறங்கள் அழிந்து விடும் என்பதை ஒரு மு.்.மின் அஞ்ச வேண்டும். சில அறிஞர்கள் கூறுகிறார்கள்: “இங்கு நிராகரிப்பு என்பதன் கருத்து மார்க்கத்தை விட்டும் வெளியேற்றி விடக்கூடிய நிராகரிப்பு என்பதல்ல. மாறாக வன்மையாக எச்சரிக்கவே நிராகரிப்பு எனும் சொல் ஆளப்பட்டுள்ளது.” இன்னும் சில இமாம்கள், “இங்கு நிராகரிப்பு என்பது, ஒரு முஸ்லிமைக் கொல்வது கூடும் எனக் கருதி கொலை செய்வதற்கே சொல்லப்படுகிறது” என்று கூறுகின்றனர். பெரும் பாவங்கள் அவற்றைச் செய்பவனை தீயவனாக ஆக்குகின்றன. அவன் முஸ்லிமாக இருந்தால் பெரும் பாவத்தைச் செய்ததனால் அவன் தீயவன் ஆவான்.

ஒரு முஸ்லிமைத் திட்டுவது தடை செய்யப்பட்டுள்ளது. காரணம் அவனுடைய மானம் மரியாதை புனிதப்படுத்தப் பட்டுள்ளது. புறம் பேசுவது, பழிப்பது, சபிப்பது, கேலி செய்வது ஆகியவையும் இத்தடையில் அடங்கும். ஒரு முஸ்லிமுடைய இரத்தம் (உயிர்) தடை செய்யப்பட்டதாகும். ஒரு முஸ்லிமைக் கொலை செய்வதை ஆகுமெனக் கருதுகிறவன் கா.்.பிர் ஆவான். இந்நபிமொழி பொருள் செறிந்த நபிமொழிகளில் ஒன்றாகும். சின்னஞ் சிறிய நபிமொழியாக இருந்தும் இது பொருள் செறிந்ததாகவும் ஆழ்ந்த கருத்துக்களைத் தரக் கூடியதாகவும் இருக்கின்றது. இந்நபிமொழி இரு வகையான

(சிறு) வாசகங்களைக் கொண்டது. இதில் ஏராளமான சட்டங்கள் இருக்கின்றன.

## பெரும்பாவங்கள் புரிவதால் ஒரு முஸ்லிம்கா∴பிராக மாட்டான்

86. உபாதா பின் ஸாமித் (ரலி) அவர்கள் பத்ருப் போரில் கலந்து கொண்டவரும் அகபா உடன்பாடு நடந்த இரவில் கலந்து கொண்ட தலைவர்களில் ஒருவரும் ஆவார். அவர் அறிவிப்பதாவது:

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், தம்மைச் சுற்றி தோழர்களில் ஒரு குழு அமர்ந்திருக்கும்போது கூறினார்கள்: அல்லாஹ்வுக்கு இணையாக எதனையும் கருதுவதில்லை, திருடுவதில்லை, விபச்சாரம் செய்வதில்லை, உங்கள் குழந்தைகளை கொல்வதில்லை, உங்களுடைய கை கால் களுக்கிடையே எந்த அவதூறையும் இட்டுக்கட்டுவதில்லை, எந்த ஒரு நல்ல காரியத்திலும் (எனக்கு) மாறு செய்வதில்லை என்று என்னிடம் உறுதிமொழி தாருங்கள். உங்களில் எவர் இவற்றை நிறைவேற்றுகிறாரோ அவரது கூலி அல்லாஹ் விடம் உள்ளது. இவற்றில் எதையாவது ஒருவர் செய்து, (அதற்காக) இவ்வுலகில் தண்டிக்கப்பட்டு விட்டால் அது அவருக்குப் பரிகாரமாக ஆகிவிடும். இவற்றில் எதையாவது ஒருவர் செய்து, பின்னர் அல்லாஹ் அதனை (யாருக்கும் தெரியாமல்) மறைத்து விட்டால் அவர் அல்லாஹ்வின் பொறுப்பில் இருக்கிறார். அவன் நாடினால் அவரை மன்னிப்பான். அவன் நாடினால் அவரைத் தண்டிப்பான். உடனே நாங்கள் அவ்வாறே நடப்போம் என்று அவர்களிடம் உறுதிமொழி எடுத்துக் கொண்டோம்.

நூல்: புகாரி-18, முஸ்லிம்-1709

**இந்நபிமொழியில்:**

நபி (ஸல்) அவர்களிடம் உறுதிமொழி எடுத்துக் கொள்ளும் விஷயங்கள் சந்தர்ப்பங்கள், சூழ்நிலைகளைப் பொறுத்து பலவாகும். காரியங்களில் மிக முக்கியமானது ஏகத்துவம். பாவங்களில் மிகப் பெரியது அல்லாஹ்வுக்கு இணை கற்பித்தல். திருடுதல் ஹராமாகும். அது பெரும் பாவங்களில் ஒன்று. இந்த சமுதாயத்திற்கு விபச்சாரம் தடை செய்யப் பட்டுள்ளது. அது மிகப் பெரும் குற்றமாகும். வறுமைக்கு அஞ்சி குழந்தைகளைக் கொல்வது தடுக்கப்பட்டுள்ளது. அது அறியாமைக் காலத்துச் செயல்களில் ஒன்று. பொய், அவதூறு மற்றும் இட்டுக்கட்டுதல் ஹராமாகும். (தூதருக்கு) கட்டுப்படுதல் என்பது நற்காரியங்களில் தான். நன்மையான காரியங்களில் (தூதருக்கு) மாறு செய்வது ஹராமாகும்.

நல்லறங்களுக்கான கூலி அல்லாஹ்விடமே எதிர்பார்க் கப்படும்; மற்றவர்களிடமல்ல. மனிதன் தனது நற்செயல் மூலம் அல்லாஹ்விடம் உள்ளதை (வெகுமதியை) தேடிக் கொள்ள வேண்டும். இணைவைத்தலும் ஒரு செயல் தான். பாவங்களைத் தவிர்த்தவனுக்கு அவற்றை விட்டதற்காகவும், அதில் பொறுமையாக இருந்ததற்காகவும் அல்லாஹ் நற்கூலி வழங்குவான். (இவ்வுலகில் குற்றங்களுக்கு வழங்கப்படும்) தண்டனைகள் மனிதனைத் தூய்மைப்படுத்தக்கூடியவை யாகவும் அக்குற்றங்களுக்குப் பரிகாரமாகவும் அமையும். துன்பங்களும் அவ்வாறு தான். ஒருவன் தண்டனைக்குரிய குற்றத்தைச் செய்துவிட்டால் தண்டனையைப் பெற தாமாக முன் வரவேண்டும் என்பது அவசியமில்லை. மாறாக அவன் குற்றத்தை மறைத்து தவ்பாச் செய்து விடலாம்.

பெரும் பாவங்களைச் செய்பவர்கள் அல்லாஹ்வின் நாட்டத்தின் கீழ் உள்ளார்கள். அவன் நாடினால் அவர்களைத் தண்டிப்பான். அவன் நாடினால் அவர்களை மன்னிப்பான். பெரும் பாவம் செய்பவன் அதை ஆகுமானதாகக் கருதாத வரை முஸ்லிமாகவே இருப்பான்; அதனால் காரணமாக கா.ஃ.பிராக மாட்டான். பெரும் பாவம் செய்தவன் சிலவேளை நரகத்திற்குச் செல்லலாம். பிறகு (இணைகற்பிக்காத) ஏக இறை நம்பிக்கை காரணமாக அதிலிருந்து வெளியேற்றப்படுவான். நற்செயல்கள் ஈமானைச் சேர்ந்ததாகும். (இறைவனுக்கு) கீழ்படிவதன் மூலம் அது அதிகரிக்கும். மாறு செய்வதன் மூலம் குறையும். மாற்றுக் கருத்துடையோரின் கூற்று இதற்கு மாற்றமானதாம்.

87. அபூதர் அறிவிப்பதாவது: நான் நபி (ஸல்) அவர்களிடம் வந்தேன். அப்போது அவர்கள் தூங்கிக் கொண்டிருந்தார்கள். அவர்கள் மீது வெண்மையான ஆடை இருந்தது. பிறகு மீண்டும் அவர்களிடம் வந்தேன். அப்போதும் அவர்கள் உறங்கிக் கொண்டிருந்தார்கள். பிறகு மீண்டும் அவர்களிடம் வந்தபோது அவர்கள் விழித்திருந்தார்கள். நான் அவர்களுக்கு அருகில் அமர்ந்தேன். அப்போது அவர்கள், “ஒரு அடியான் வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாரும் இல்லை என்று கூறி பிறகு அதே நிலையில் அவன் மரணம் அடைந்தால் சொர்க்கம் செல்வான்” என்று கூறினார்கள். ‘அவன் விபச்சாரம் செய்தாலும், திருடினாலுமா?’ எனக் கேட்டேன். “அவன் விபச்சாரம் செய்தாலும் திருடினாலும் தான்” என்றார்கள். ‘அவன் விபச்சாரம் செய்தாலும், திருடி னாலுமா?’ எனத் திரும்பவும் கேட்டேன்? அதற்கு அவர்கள், “அவன் விபச்சாரம் செய்தாலும் திருடினாலும் தான்” என

மூன்று முறை கூறிவிட்டு நான்காவது முறையாக “அபூதர் உடைய மூக்கு மண்ணைக் கவ்வினாலும் தான்” என்று கூறினார்கள். (புகாரி-5827, முஸ்லிம்-94)

**இந்நபிமொழியில்:**

தமது சமுதாயத்தின் மீது நபிகள் நாயகத்துக்கு இருக்கிற பரிவும், கருணையும் இங்கு சுட்டிக்காட்டப்பட்டுள்ளது. பெரும் பாவம் செய்பவன் அதை ஆகுமானதெனக் கருதாத வரை கா.ஃபிராக மாட்டான். ஏகத்துவவாதிகளில் உள்ள பாவிகளின் (கடைசி) ஒதுங்குமிடம் சொர்க்கம். ஏகத்துவம் பாவங்களை மாய்த்துவிடக்கூடியவைகளில் மிகப் பெரிய தாகும். மதம் மாறுவது நல்லறங்களை அழித்துவிடும். செயல்கள் கணிக்கப்படுவது இறுதி நிலையைப் பொறுத்தாகும். ஒரு விஷயத்தில் சந்தேகம் ஏற்பட்டால் அது பற்றி அறிஞரிடம் கேட்கலாம். கேட்ட விஷயத்தில் குழப்பம் ஏற்பட்டு விட்டால் மீண்டும் கேட்கலாம். கருத்தை உணர்ந்து கொள்வதற்காக மாணவனை (திட்டுதல் போன்ற) சில வார்த்தைகளைச் சொல்லிப் பண்படுத்தலாம்.

## பரிந்துரை

88. “அல்லாஹ்வின் தூதரே! மறுமை நாளில் உங்கள் பரிந்துரைக்குத் தகுதி படைத்த மனிதர் யார்?” என அபூஹுரைரா (ரலி) அவர்கள் கேட்டார்கள். அதற்கு நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், “அபூஹுரைராவே! இது குறித்து முதன் முதலாக உம்மைத் தவிர வேறு யாரும் கேட்க மாட்டார்கள் என்றே நினைத்தேன். காரணம் நபிமொழியில் உமக்கு இருக்கின்ற ஆர்வத்தை நான் கண்டதனால் கூறுகிறேன்” என்று சொல்லிவிட்டு, “மறுமையில் எனது

பரிந்துரைக்கு அருகதையுள்ளவர் 'வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை' என்று உள்ளத்திலிருந்து- தூய எண்ணத்துடன் கூறியவராவார்” என்று கூறினார்கள். அறிவிப்வர்: அபூஹுரைரா (ரலி),

நூல்: புகாரி-99, அஹ்மத்

**இந்நபிமொழியில்:**

பெரும்பாவங்கள் செய்தவர்கள் உட்பட- பொதுவாக இறைவனுக்கு இணை கற்பிக்காதவர்கள் அனைவரும் நபி (ஸல்) அவர்களின் பரிந்துரைக்கு உரியவர்களே. ஆனால் நயவஞ்சகர்கள் நபி (ஸல்) அவர்களின் பரிந்துரைக்கு அப்பாற்பட்டவர்கள். ஏனெனில் லாஇலாஹ இல்லல்லாஹ்- 'வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை' என்று அவர்கள் கூறினால் உண்மையாகவும் உளப்பூர்வமாகவும் கூறமாட்டார்கள். நபிகள் நாயகத்தின் பரிந்துரை அவர்களது சமுதாயத்தவர்களுக்கு உண்டு என்பது நிரூபணம்.

லாஇலாஹ இல்லல்லாவின் சிறப்பு இங்கு சொல்லப் பட்டுள்ளது. இக்கலிமா நற்செயல்களுக்கு அடிப்படையாகும். ஹதீஸிலும் கல்வியிலும் ஆர்வம் காட்டுவதன் சிறப்பும் இந்நபி மொழியில் கூறப்பட்டுள்ளது. அபூஹுரைரா (ரலி) அவர்களின் சிறப்பும், ஹதீஸில் அவர்களுக்கு எத்துணை ஆர்வம் இருந்திருக்கிறது என்பதும் இங்கு சுட்டிக்காட்டப்பட்டுள்ளது.

## சொர்க்கத்தில் முஃமின்கள் தம் இறைவனைக் காணல்

89. ஒரு பௌர்ணமி அன்று நாங்கள் நபி (ஸல்) அவர்களுடன் அமர்ந்திருந்தோம். அப்போது நபியவர்கள்

நிலவை நோக்கி, “இந்த நிலவை நீங்கள் காண்பது போல நிச்சயம் உங்கள் இறைவனை நீங்கள் காண்பீர்கள். அவனைக் காண்பதில் நெருக்கடிக்குள்ளாக மாட்டீர்கள். சூரியன் உதிக்கும் முன்னரும், சூரியன் மறயைும் முன்னரும் தொழும் விஷயத்தில் (தூக்கம் போன்ற வற்றால்) நீங்கள் மிகைக்கப்படாதிருக்க இயலுமானால் அதைச் செய்யுங்கள்.”

அறிவிப்பவர்: ஜரீர் (ரலி), நூல்: புகாரி-7734, முஸ்லிம்-633

**இந்நபிமொழியில்:**

மறுமையில் மு.ஃமின்கள் தம் இறைவனை காண்பார்கள் என்பது நிரூபணமாகின்றது. அவர்கள் தம் இறைவனைப் பார்ப்பது சந்திரனைப் பார்ப்பதுடன் ஒப்பிடப்பட்டிருப்பது தெள்ளத் தெளிவாகப் பார்க்கலாம் என்ற கருத்திலாகும். மாறாக அல்லாஹ் சந்திரனுக்கு ஒப்பாக இருக்கிறான் எனும் கருத்தில் அல்ல. இத்தகைய குறைகளை விட்டும் அல்லாஹ் உயர்ந்தவன்! இப்படி அல்லாஹ்வைப் பார்ப்பதற்கு எளிதாக்கி வைக்கக்கூடிய காரண காரியங்களில் ஒன்று தொழுகை. அதிலும் மிக முக்கியமானது ஃபஜ்ர், அஸர் தொழுகைகள்.

வெப்பம் தணியும்போது தொழக்கூடிய இரண்டு தொழுகைகளை எவன் பேணுகிறானோ அவன் சொர்க்கம் செல்வான். வெப்பம் தணியும் போது தொழக்கூடிய அந்த இரு தொழுகைகள் ளுஹர், அஸ்ரு தொழுகைகளாகும். ஏனெனில் அவ்விரண்டும் தூக்கம் மற்றும் சோம்பல் வரும் நேரத்தில் தொழப்படுபவையாகும். நற்செயல்கள் எல்லா நன்மைக்கும் காரணமாகும். அல்லாஹ்வைப் பார்ப்பது மிகப் பெரும் பாக்கியமாகும். அல்லாஹ் நமக்கும் அவன் திருமுகத்தைக் காண்பிப்பானாக!

90. “நீங்கள் மரணிக்காத வரை உங்கள் இறைவனைக் காண மாட்டீர்கள்” என நபி (ஸல்) அவர்கள் தஜ்ஜாலைப் பற்றிக் கூறுகின்ற ஒரு நீண்ட ஹதீஸில் குறிப்பிட்டுள்ளார்கள்.

அறிவிப்பவர்: அபூ உமாமா (ரலி),

நூல்: இப்னுமாஜா-4077, அஹ்மத்

**இந்நபிமொழியில்:**

திண்ணமாக அல்லாஹ்வை இவ்வுலகில் காண முடியாது. மாறாக மறுமையில் தான் பார்க்க முடியும் என்பதற்கு இந்நபி மொழியில் தெளிவான சான்று உள்ளது. அவனது மு.ஃமினான அடியார்கள் அவனைக் காண்பார்கள். அவனுடைய பகைவர் களான கா.ஃபிர்கள் அவனைக் காண மாட்டார்கள். மறுமையில் அல்லாஹ்வைப் பார்க்க முடியாது என்று கூறுகின்ற தவறான கொள்கையுடையவர்களுக்கு இதில் மறுப்பு இருக்கிறது. ஏனெனில் மு.ஃமின்கள் தம் மரணத்திற்குப் பின் இறைவனைக் காண்பார்கள் என இங்கு நிரூபணமாகி யுள்ளது.

91. நபி (ஸல்) அவர்களுடைய காலத்தில் சிலர், “அல்லாஹ்வின் தூதரே! மறுமையில் எங்கள் இறைவனை நாங்கள் பார்க்க முடியுமா?” எனக் கேட்டனர். அதற்கு நபி (ஸல்) அவர்கள், ஆம் என்று கூறிவிட்டு, “முகில் இல்லாத நண்பகலில் கதிரவனைக் காண்பதற்கு நீங்கள் சிரமப் படுவீர்களா? (அது போல) பௌர்ணமி இரவில் மேகம் இல்லாமல் இருக்கும்போது நிலவைப் பார்ப்பதற்கு நீங்கள் கஷ்டப்படுவீர்களா?” எனக் கேட்டார்கள். அதற்கு, ‘அல்லாஹ்வின் தூதரே! நாங்கள் கஷ்டப்பட மாட்டோம்’ எனத் தோழர்கள் கூறினர். உடனே நபி (ஸல்) அவர்கள் பின் வருமாறு கூறினார்கள்: (சூரியன், சந்திரன்) இவ்விரண்டில்

ஒன்றைப் பார்ப்பதற்கு நீங்கள் சிரமப்படாதது போல மறுமையில் அல்லாஹ்வைப் பார்ப்பதற்கும் சிரமம்பட மாட்டீர்கள்.

மறுமை நாள் வந்து விட்டால் அறிவிப்பாளர் ஒருவர், “ஒவ்வொரு சமுதாயத்தினரும் அவரவர் வணங்கி வந்த (தெய்வத்) தைப் பின்தொடர்ந்து செல்லட்டும்” என அறிவிப்புச் செய்வார். அப்போது அல்லாஹ்வை விடுத்து சிலைகளையும் பலிபீடங்களையும் வணங்கி வந்தவர்கள் எவரும் நரகத்தில் விழாமல் இருக்க மாட்டார்கள். இறுதியில் அல்லாஹ்வை (மட்டும்) வணங்கி வந்த நல்லவர்கள், தீயவர்கள், மீதமுள்ள வேதக்காரர்கள் மட்டுமே எஞ்சியிருப்பார்கள்.

பிறகு யூதர்கள் அழைக்கப்படுவார்கள். அவர்களிடம், “நீங்கள் யாரை வணங்கிக் கொண்டிருந்தீர்கள்?” என வினவப்படும். அவர்கள் ‘நாங்கள் அல்லாஹ்வுடைய மகன் உஸைரை வணங்கிக் கொண்டிருந்தோம்’ என்பார்கள். (அவர்களிடம்) சொல்லப்படும்: “நீங்கள் பொய் சொல்கிறீர்கள்! அல்லாஹ் எவரையும் மகனாகவோ மனைவியாகவோ எடுத்துக் கொள்ளவில்லை. உங்களுக்கு என்ன வேண்டும்?” அதற்கவர்கள், ‘எங்கள் இறைவனே! எங்களுக்குத் தாகமாக இருக்கிறது, எங்களுக்குத் தண்ணீர் தருவாயாக!’ என்று கூறுவார்கள். அதற்கு (நீர் அருந்த) நீங்கள் வரவில்லையா? என அவர்களிடம் சைக்கினையாகச் சொல்லப்படும். பிறகு நரகத்தின் பக்கம் அவர்கள் ஒன்று சேர்க்கப்படுவார்கள். சிதைத்து சின்னா பின்னமாக்குகின்ற அந்நரகம் (உக்கிரமான நெருப்பின் காரணமாக) கானல் நீர் போல காட்சியளிக்கும். அந்நரகில் அவர்கள் விழுவார்கள்.

அதன் பிறகு கிறிஸ்தவர்கள் அழைக்கப்படுவார்கள். அவர்களிடம், “நீங்கள் யாரை? வணங்கி வந்தீர்கள்” என்று கேட்கப்படும். அதற்கவர்கள், ‘நாங்கள் அல்லாஹ்வுடைய மகன் மஸீஹை (ஈஸாவை) வணங்கி வந்தோம்’ என பதில் அளிப்பார்கள். “நீங்கள் பொய்யுரைக்கின்றீர்கள். அல்லாஹ் யாரையும் மகனாகவோ மனைவியாகவோ எடுத்துக் கொள்ள வில்லை” என அவர்களிடம் கூறப்படும். பிறகு “உங்களுக்கு என்ன வேண்டும்?” என அவர்களிடம் வினவப்படும். அதற்கு அவர்கள், எங்கள் இறைவனே! எங்களுக்குத் தாகமாக இருக்கிறது தண்ணீர் வேண்டுமெனக் கேட்பார்கள். அதற்கு “(நீர் அருந்த) நீங்கள் வரவில்லையா?” என சமிஞ்சையாகச் சொல்லப்படும். உடனே அவர்கள் நரகத்தின் பக்கம் ஒன்று சேர்க்கப்படுவார்கள். சிதைத்து சின்னா பின்னமாக்குகின்ற அந்நரகம் (கொடுமையான நெருப்பின் காரணமாக) கானல் நீர் போல காட்சியளிக்கும். அந்த நரகில் அவர்கள் வீழுவார்கள்.

இறுதியாக அல்லாஹ்வை வணங்கி வந்த நல்லவர்கள், கெட்டவர்கள் மட்டுமே எஞ்சியிருப்பார்கள். அகில உலகத் தையும் படைத்த இறைவன், எந்த வடிவில் அவனை(அதற்கு முன் அங்கு) அவர்கள் கண்டார்களோ அதற்கு நெருக்கமான வடிவில் அவர்களிடம் வந்து, “ஒவ்வொரு சமுதாயத்தினரும் அவரவர் வணங்கி வந்த(தெய்வத்)தின் பின்னால் சென்று கொண்டிருக்கின்ற நிலையில் நீங்கள் (இங்கு) எதை எதிர் பார்த்துக் கொண்டிருக்கிறீர்கள்?” எனக் கேட்பான். அதற்கு அவர்கள், ‘எங்கள் இறைவனே! உலகில் அவர்களுக்கு நாங்கள் மிகவும் தேவையுடையவர்களாக இருந்தும் நாங்கள் அவர்களைப் பிரிந்தோம். அவர்களுடன் நாங்கள் இணங்கி

இருக்கவில்லையே! (இப்போது நாங்கள் எவ்வாறு அவர்களுடன் செல்ல முடியும்?)' எனக் கூறுவார்கள்.

அப்போது அவன், "நான் தான் உங்கள் இறைவன்" என்று கூறுவான். உடனே அவர்கள். 'உன்னை விட்டும் அல்லாஹ் விடம் நாங்கள் பாதுகாப்புத் தேடுகிறோம். அல்லாஹ்வுக்கு நாங்கள் எதையும் இணையாக்க மாட்டோம் என இரண்டு முறையோ மூன்று முறையோ கூறுவார்கள். இறுதியில் (கடுமையான சோதனையின் காரணமாக) அவர்களில் சிலர் நேர்மையிலிருந்து தவறிவிடும் அளவுக்குச் சென்று விடுவர். அப்போது "உங்கள் இறைவனை நீங்கள் அறிந்து கொள்ள அடையாளம் ஏதும் உங்களுக்கும் உங்கள் இறைவனுக்கும் இடையே இருக்கிறதா?" என அவன் கேட்பான். அவர்கள் ஆம்! என்பார்கள்.

உடனே (அல்லாஹ்வின்) கணுக்காலை விட்டும் திரை அகற்றப்படும். அப்போது (உலகில்) எவர்கள் சுயவிருப்பத்தோடு அல்லாஹ்வுக்கு ஸஜ்தா செய்து வந்தார்களோ அவர்களுக்கு அல்லாஹ் ஸஜ்தா செய்ய அனுமதி வழங்குவான். (பழிச் சொல்லிலிருந்து) தப்பிப்பதற்காகவும் பிறருக்குக் காட்டுவதற் காகவும் எவர்கள் ஸஜ்தா செய்து வந்தார்களோ அவர்களின் முதுகை வளையாதபடி அல்லாஹ் ஆக்கிவிடுவான். அவர்கள் ஸஜ்தா செய்ய நாடும்போதெல்லாம் பின்புறமாக விழுவார்கள். பிறகு (ஸஜ்தா செய்தவர்கள்) தமது தலைகளை உயர்த்துவார்கள். அப்போது அல்லாஹ், அவர்கள் முதன் முறையாகப் பார்த்த வடிவில் மாறியிருப்பான். அவன், "நான் தான் உங்கள் இறைவன்" எனக் கூறுவான். அவர்களும், 'நீ தான் எங்கள் இறைவன்' என்று கூறுவார்கள்.

அதன் பிறகு நரகத்தின் மீது ஒரு பாலம் அமைக்கப்பட்டு பரிந்துரை நடக்கும். அவர்கள் ‘இறைவா! (எங்களைக்) காப்பாற்று! (எங்களைக்) காப்பாற்று!’ என்பார்கள். அப்போது ‘அல்லாஹ்வின் தூதரே! பாலம் என்றால் என்ன?’ என்று வினவப்பட்டது. அதற்கு நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: அது சருக்கி விடக்கூடிய ஒரு இடம்! அதில் இரும்பாலான கொக்கிகளும் நஜ்த் தேசத்தில் காணப்படக்கூடிய ஸ.:.தான் என்றழைக்கப்படும் உறுதியான முட்களும் இருக்கும். மு.:.மின்கள் (அப்பாலத்தை தத்தமது செயல்களுக்கேற்ப) கண் இமைக்கும் நேரத்திலும், மின்னல் வேகத்திலும், காற்று வேகத்திலும், நன்கு ஓடக்கூடிய குதிரை, ஒட்டக வேகத்திலும் கடப்பார்கள். அவர்களில் சிலர் காப்பாற்றப்பட்டுத் தப்பித்து விடுவார்கள், சிலர் (கொக்கிகளிலும்,முட்களிலும்) மாட்டப்பட்டு விடப்படுவார்கள், இன்னும் சிலர் நரகில் தள்ளப்படுவார்கள்.

இறுதியில் மு.:.மின்கள் நரகலிருந்து தப்பித்து விட்ட பிறகு என்னுடைய உயிர் எவன் கையிலிருக்கிறதோ அவன் மீது ஆணையாக! இவ்வுலகில் அநீதியிழைத்தவரிடமிருந்து தனது உரிமையைப் பெறுவதற்காக உங்களில் யாரும் அல்லாஹ் விடம் கடுமையாக முறையிடுவதில்லை; மறுமையில் நரகில் வீழ்ந்த தம்முடைய சகோதரர்களுக்காக அல்லாஹ்விடம் மு.:.மின்கள் முறையிடுவதை விட. அவர்கள் (நரகிலுள்ள தம் சகோதரர்களைப் பற்றி) “எங்கள் இறைவனே! அவர்கள் எங்களோடு நோன்பு நோற்றும், தொழுது கொண்டும், ஹஜ்ஜு செய்தும் வந்தார்கள்” எனக் கூறுவார்கள். அப்போது, “உங்களுக்குத் தெரிந்தவர்களை நரகத்திலிருந்து வெளி யேற்றுங்கள்!” என்று அவர்களுக்குச் சொல்லப்படும். (நரகில்

உள்ள) அவர்களுடைய முகம் நரகத்திற்குத் தடை செய்யப் பட்டிருக்கும். (எளிதில் அவர்களை இனம் காண முடியும்)

அவர்கள் நரகத்திலிருந்து அதிகமானோரை வெளியேற்றி விடுவார்கள். நரகம் அவர்களை அவர்களின் முன் கால்களின் பாதி வரையும் முழங்கால் வரையும் தீண்டியிருக்கும். பிறகு, 'எங்கள் இறைவனே! நீ (வெளியேற்றும்படி) கட்டளை யிட்டவர்களில் எவரும் அதில் (நரகில்) இல்லை' என்று கூறுவார்கள். அதற்கு, அல்லாஹ், "நீங்கள் திரும்பச் சென்று எவரது உள்ளத்தில் ஒரு தீனார் அளவு நன்மை இருப்பதாகப் பார்க்கின்றீர்களோ அவர்களையும் வெளியேற்றுங்கள்" எனக் கூறுவான். அவர்கள் ஏராளமானோரை வெளியேற்றுவார்கள். பிறகு இறைவா! 'நீ ஏவியவர்களில் எவரையும் நாங்கள் விட்டு விடவில்லை' என்பார்கள்.

பிறகு அல்லாஹ் கூறுவான்: "நீங்கள் மீண்டும் சென்று எவர்களுடைய உள்ளத்தில் பாதி தீனார் அளவு நன்மை இருப்பதாகக் காண்கிறீர்களோ அவர்களையும் வெளி யேற்றுங்கள்." அதன்படி அவர்கள் ஏராளமானோரை வெளி யேற்றிவிட்டு, 'இறைவா! நீ கூறியவர்களில் எவரையும் அதில் நாங்கள் விட்டுவில்லை' என்பார்கள். பிறகு அல்லாஹ், "நீங்கள் திரும்பவும் சென்று எவர்களின் உள்ளத்தில் கடுகளவேனும் நன்மை இருப்பதாகக் காண்கிறீர்களோ அவர்களையும் வெளியேற்றுங்கள்" என்று கூறுவான். அதன் பிரகாரம் ஏராளமானோரை அவர்கள் வெளியேற்றி விட்டு, 'எங்கள் இறைவனே! அதில் நன்மையுடைய எவரையும் விட்டு வைக்கவில்லை' எனக் கூறுவார்கள்.

அப்போது அல்லாஹ், "வானவர்கள் பரிந்துரை செய்து விட்டனர். நபிமார்கள் பரிந்துரை செய்து விட்டனர்.

மு.ஃ.மின்களும் பரிந்துரை செய்து விட்டனர். (இனி) கருணை யாளர்களுக்கெல்லாம் மிகப் பெரும் கருணையாளன் மட்டுமே எஞ்சியிருக்கின்றான்” என்று கூறிவிட்டு நரகிலிருந்து ஒரு பிடி அள்ளுவான். அறவே நன்மை செய்யாத மக்களையும் அதிலிருந்து வெளியேற்றுவான். அவர்கள் அடுப்புக் கரியாக மாறியிருப்பார்கள். சொர்க்கத்தினுடைய ஆரம்பத்தில் இருக்கின்ற ஜீவநதி என்று சொல்லப்படக்கூடிய ஒரு நதியில் அவர்களைப் போடுவான். பெரும் வெள்ளம் பாயும் ஓடைக் கரையில் விதைகள் முளைப்பதைப் போல அவர்கள் பொலிவடைவார்கள். அவ்விதைகள் கற்கள் அல்லது செடிகளுக்கருகே முளைப்பதையும் அவற்றில் சூரிய வெளிச்சத்தில் வளரக்கூடியவை பசுமையாகவும் மஞ்சளாகவும், நிழலில் வளரக்கூடியவை வெள்ளையாகவும் இருப்பதை நீங்கள் பார்த்ததில்லையா?

உடனே தோழர்கள் ‘அல்லாஹ்வின் தூதரே! தாங்கள் (முன்பு) கிராமத்தில் ஆடு மேய்த்துக் கொண்டிருந்ததுபோல் தெரிகின்றதே!’ என்றார்கள். அதன் பிறகு நபி (ஸல்) அவர்கள் கூறியதாவது: அவர்கள் முத்துக்களைப்போல் வெளிப்படுவர். அவர்களின் கழுத்துக்களில் (அடையாளமாக) மாலைகள் இருக்கும். அவர்களை சொர்க்கவாசிகள் இனம் கண்டு, ‘இவர்கள் இறைவனால் விடுதலை செய்யப்பட்டவர்கள். ஒரு நன்மையும் செய்யாமல் இவர்களை அல்லாஹ் சொர்க்கத்தில் நுழைத்து விட்டான்!’ என்பார்கள்.

பிறகு அல்லாஹ் கூறுவான்: “நீங்கள் சொர்க்கத்துக்குச் செல்லுங்கள். அதில் நீங்கள் காணுகின்ற அனைத்தும். உங்களுக்குரியது.” அதற்கு அவர்கள், ‘எங்கள் இறைவனே! அகிலத்தாரில் யாருக்கும் வழங்காத பாக்கியத்தை

எங்களுக்கு நீ வழங்கியிருக்கிறாய்' என்பார்கள். உடனே அல்லாஹ், "உங்களுக்காக இதை விடச் சிறந்த ஒன்று என்னிடம் உள்ளது" என்று கூறுவான். 'எங்கள் இறைவனே! இதை விடச் சிறந்தது என்ன இருக்கிறது?' என அவர்கள் கேட்பார்கள். அதற்கவன், "அது எனது திருப்பொருத்தம் ஆகும். இதன் பிறகு நான் உங்கள் மீது கோபம் கொள்ளவே மாட்டேன்" என்று கூறுவான்.

அறிவிப்பவர்: அபூஸயீத் (ரலி) நூல்: முஸ்லிம்-183

**இந்நபிமொழியில்:**

மறுமையில் மு.்.மின்கள் தம் இறைவனைக் காண்பார்கள் என்பது நிரூபணமாகின்றது. இறைவனுக்கு கணுக்கால் இருக்கிறது என்பதும் நிரூபணம். இதை ஒப்பாக்காமல் உவமைப்படுத்தாமல் ஹதீஸில் வந்துள்ளதுபோல நம்ப வேண்டும். அல்லாஹ் கூறுகிறான்: "அவனைப்போல் எதுவும் இல்லை. அவன் யாவற்றையும் செவியேற்பவன், பார்ப்பவன்." (42:11) அல்லாஹ்வை விடுத்து வேறு கடவுளை எடுத்துக் கொண்டவர்கள் அனைவரும் வழிகேடர்கள் ஆவர். பாவிகளான ஏகத்துவவாதிகள் நரகத்தில் நிரந்தரமாக இருக்க மாட்டார்கள். பெரும் பாவம் செய்தவர்களை ஒரு வேளை அல்லாஹ் மன்னிக்கவில்லையெனில் அவர்கள் வேதனை செய்யப்படலாம். முகஸ்துதியின் அபாயம் இங்கு சுட்டிக்காட்டப்பட்டுள்ளது. அது சிறிய நயவஞ்சகமாகும். முகஸ்துதிக்காகச் செய்பவனின் நல்லறங்கள்- அவன் நேன்பு நோற்றாலும், தொழுதாலும், ஹஜ் செய்தாலும்- அழிந்துவிடும்.

இவ்வுலகிலுள்ள செயல்களும் அவற்றின் சட்டநிலைகளும் வெளிப்படையைப் பொறுத்தே கணிக்கப்படுகின்றன. அந்தரங் கங்களுக்கு அல்லாஹ் பொறுப்பேற்றுக் கொள்கிறான்.

வானவர்கள், நபிமார்கள், மு.்.மின்கள் யாவரும் பரிந்துரை செய்வார்கள் என்பது நிரூபணமாகின்றது. திருப்தியடைவதும் அதிருப்தி அடைவதும் அல்லாஹ்வுக்கு இருக்கிறது என்பது நிரூபணமாகின்றது. அவன் தன் நேசர்களைப் பொருந்திக் கொள்கிறான். தனது எதிரிகள் மீது அதிருப்தி கொள்கிறான். இது அவனது மகத்துவத்திற்கு ஏற்ற விதத்தில் இருக்கும்.

நரகத்தின் நடுவே பாலம் அமைக்கப்படும் என்பது நிரூபணம். அப்பாலத்தைக் கடப்பதென்பது செயல்களைப் பொறுத்ததாகும். அல்லாஹ்வுக்கு அவனுக்கே உரித்தான விதத்தில் உருவம் இருக்கிறது என்பதும் நிரூபணமாகின்றது. படைப்பினங்களின் உருவங்களுக்கு அது ஒப்பாகாது. மக்களுக்கு அவர்கள் வாழ்வில் அறிந்து கொண்ட விஷயங்களை வைத்து மறுமை மற்றும் மறைவான விஷயங்களுக்கு உவமானம் காட்டுவது குறித்து இங்கு கூறப்பட்டுள்ளது.